உ
சிவமயம்



# மன்னரை முந்தியோர்



நூல் ஆக்கமும் அன்பளிப்பு வெளியீடும்

**மெ. சண்முகம்,** B.Sc., B.Ed.,



இடம் :

பட்டினத்தடிகள் திருவிழா

காவிரிப்பூம்பட்டின நகர விடுதி.

நாள் : 17.7.2005

# முன்னுரை

செம்மொழியாம் தமிழ்விளங்கும் பாண்டிவள நாட்டில் பண்பாட்டின் தொட்டிலாகி வரலாற்றில் பல்கலைக்கழகமாகி வேள் வணிகராக மிளிர்கின்ற நாட்டுக்கோட்டை நகரத்தார்களாகிய நம் சமூகம் ஒரு பெருங்கடல். இப்பெருங்கடலில் நான் ஒரு சிறுமீன், சிறு மீனாக இருந்து இப்பெருங்கடலின் பெருமைகளைச் சொல்வதில் பேருவகை கொள்கிறேன்.

பேருவகை கொண்டு ஆக்கியிருக்கும் இச்சிறு நூலை மலர் மாலையாக்கி நம் குலமான திருப்பாற்கடலில் எனை ஈன்ற என் பெற்றோர் இறையிற் கலந்த திரு. ஓ. இராம. மெ. சுப. மெய்யப்ப செட்டியார் திருமதி. முத்தாத்தாள் ஆச்சி திருவடிகளுக்கு என் மனைவி நாச்சம்மை மகன் மெய்யப்பன் துணையொடு அணிவிக்கின்றேன்.

உரை காண்பவரின் அறிவுக்கு ஏற்றாற் போல நூலின் பொருள் விரியும் அதுபோல என்னுடைய சிற்றறிவுக்கு எட்டியதை பிள்ளையார் சுழி சிவமயம், படைப்பு, கழுத்துரு போன்ற சிலவற்றிற்கு விளக்கமாகத் தந்துள்ளேன்.

பேரன் பிறக்கோணும் என்ற வாழ்த்தில் அறிவியல் கூறுகள் அமைந்திருப்பதாக நான் உணர்வதை அக்கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறேன்.

நாம் எங்கே செல்கிறோம்? இனி நமக்கு என்ன பெயர்? என்ற கட்டுரையின் பிற்பகுதியில் உள்ள சில கருத்துக்கள் என் சொந்தக் கற்பனையே!

நம் அரசுகள் இந்நூலைப் பார்த்து வளமான கழனிகளைப் போல இருந்த நம்மவர்களில் பெரும்பாலோர் வானம் பார்த்த பூமியைப் போலக் காட்சியளிப்பதை உணர்ந்து

பிற சமூகத்தவர்களுடன் சேர்த்து நம்மையும் ஒரு சேர அரவணைக்கவும் நம்மவர் ஒவ்வொருவரும் மேன்மையடையவும், நிறை பல கண்ட நம் சமூகம் மேலும் சிறப்புகள் பல காணவும், மரகத விநாயகர் மலரடி பணிகிறேன்.

இந்நூல் வெளிவருவதற்கு எனக்கு உறுதுணையாக இருந்த டாக்டர் திரு. தமிழண்ணல் அவர்களுக்கும், என் பேராசிரியர் கண்டனூர் டாக்டர் திரு. அர. சிங்கார வடிவேலன் அவர்களுக்கும் டாக்டர் திருமதி. வள்ளி சொக்கலிங்கம் அவர்களுக்கும் காவிரிப்பூம்பட்டின பட்டினத்தடிகள் விழா அமைப்பாளர் கண்டனூர் திரு. நா. அரு. கா. அருணாசலஞ்செட்டியார் அவர்களுக்கும் திருவாரூர் மூகாம்பிகா ஆப்செட் அச்சகத்தாருக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.



அன்பன்

**மெ. சண்முகம்,** B.Sc., B.Ed.,

ஓடாப்புலி விலாஸ்
7, ஓடாப்புலி மெய்யப்ப செட்டியார் தெரு,
காரைக்குடி - 630 001.

மெய்யப்பா எசன்ஸ் மார்ட் & அடகுக்கடை,
1/B, T.V.R. ரோடு, லெட்சுமாங்குடி - 614 102.
திருவாரூர் மாவட்டம்.
போன் : 954367 230473

## வாழ்த்துரை

தமிழண்ணல் முனைவர் இராம. பெரியகருப்பன்
முன்னைத் தமிழ்த்துறைத் தலைவர்.
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

திரு மெ. சண்முகம் அவர்கள் நகரத்தார்களைப் பற்றி, மன்னரை முந்தியோர் எனும் இந்நூலை எழுதியுள்ளார்.

நகரத்தார்களின் கட்டிடக் கலை, கணக்கெழுதும் திறன், கழுத்துரு, பழக்கவழக்கங்கள் முதலான பல்வேறு பொருள்கள் பற்றி ஆவலால் உந்தப்பட்டு நிரம்ப எழுதியுள்ளார். இதில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரத்தில் வரும், தொன்மைக் காலச் செய்திகளும், சண்முகம் அவர்களின் சொந்தக் கருத்தான கற்பனைகளும் புதிய செய்திகளும் கலந்து எழுதப்பட்டுள்ளன.

ஆண் குழந்தை வேண்டும் என்பதில் தமிழர்கள் மட்டுமன்றி வட மொழியாளர் செல்வாக்கால் அனைத்து வகுப்பினரிடமும் ஒரு மோகம் இருந்தது. இன்றும் ஓரளவு இருக்கிறது. புத் என்னும் நரகத்தில் புகாமல் இருக்கப் புத்திரன் பிறக்க வேண்டும் என்றனர் பல சமயங்கள் பெண்களுக்கு ஆத்மா இல்லை. மோட்சப் பேறு இல்லை பாவப் பிறவிகள் என்றே விளக்கின. சண்முகம் அவர்களும் பேரன் பிறக்கோணும் என அறிவியல் முறையில் ஆராய்வதாகக் கூறுகிறார். இது போன்று இந்நூலில் வரும் பல கருத்துக்கள் எனக்குத் திகைப்பை உண்டாக்கின.

நகரத்தார்களின் சிறப்பான பக்கத்தைக் காட்ட வேண்டும் என்ற சண்முகத்தின் பேரார்வம் பாராட்டத்தக்கதே

வீட்டினுள் விளக்கேற்றுவதும், திருவிளக்கு வழிபாடுமே நமது பண்பாடு. திரு. மெ. சண்முகம் எழுதியிருப்பது போல் படையலிடும் வழிபாடே நம் பண்பாடு புதுமனை புகுவிழா முதல் திருமணச் சடங்குகள் வரை 'பொங்கல்' வைக்கும் ஒரு மரபு இன்னமும் இருக்கிறது. நகரத்தார் வீட்டில் திருப்பூட்டும் சமயம், அகவை முதிர்ந்தோடும் மாமன் அத்தை உறவினரும் புடை சூழத்திருப்பூட்டு நடைபெறும். அதுவும் மணமிடுதல் போல்வன பலவும் தமிழர் பண்பாடு யாகம், யக்ஞம் எல்லாம் நம் பண்பாடே அல்ல. சுதர்சன ஹோமம் கணபதி ஹோமம் ஆயுசு ஹோமம் இவற்றுக்குப் பதிலாக திருவிளக்கு ஏற்றி நமது வேதங்களாகிய திருமுறைகளைப் பாடி ஓதுவா மூர்த்திகளின் துணையுடன் நாமே பாடி வழி படுவதே நமக்குப் பயனாகும். வழிபாடு ஏஜண்டு வைத்துச் செய்வதன்று தரகர் வைத்து நடப்பதன்று.

ஆண்டுதோறும் காசிக்குச் செல்பவர்கள், அங்கு நடைபெறும் வழிபாட்டு முறையை அறிவார்கள். சிறு தொன்னை வடிவப் பாத்திரத்தில் கங்கை நீரை முகந்துகொண்டு. கடையில் அன்றலர்ந்த மலர்களை வாங்கிக்கொண்டு சென்று, காசி விசுவநாதராம் இறைவனுக்கு நீராட்டி அபிடேகம் செய்து மலர்களை இட்டு முடிமேலணிவித்து முழங்காலை மண்டியிட்டு வணங்கிச் செல்வர். இங்ஙனம் தாமே செய்வதுதான் வழிபாடு. இதையே நம் திருமுறைப் பதிகங்களும் கூறுகின்றன. 'போதொடு (மலரோடு) நீர் சுமந்து ஏத்தி (தாம் பாட்டுப்பாடி) புகுவார். அவர்பின் புகுவேன்' என்பது அப்பர் வாக்கு. வரிசையில் செல்ல வேண்டும். தொட்டு வணங்கவேண்டும்.

இறைவனுக்கும் அடியவருக்கும் நேரடித் தொடர்பு வேண்டும். சலம் பூவொடு மறந்தறியேன் என்றும் 'பூவும் நீரும் கொண்டு' என்றும் இங்ஙனம் பல நூறு இடங்களில் பதிகங்கள் பாடுகின்றன.

நம் திருக்கோயில்களில் எல்லாம் காசி வழிபாட்டு முறையே வரவேண்டும். நம் திருப்பதிக வழிபாட்டு முறையே வரவேண்டும். நகரத்தார்கள் இதனை உறுதியாகச் செயற்படுத்த வேண்டும்.

நம் கிரக தோசம் நீங்க நாம்தான் திருவிளக்கேற்றி படையலிட்டு பதிகம் பாடி வழிபடவேண்டும். நமக்குச் செல்வம் வளர பெண்களுக்கு மணம் முடிய, ஆயுள் கூட பிள்ளைப்பேறு பெற என எதற்கும் அவரவர் தாம்தாமே வழிபட வேண்டும். இவை அனைத்திற்கும் ஏஜண்டுகள் தரகர்களை நியமித்துச் செய்யும் 'புண்ணிய வியாபாரம்' உண்மையில் உண்மையான சைவ சித்தாந்திகளால் மறுத்து எழுதப்பட்டுள்ளது.

என என் கருத்தையும் எழுதி, மன்னர் பின்னோரைப் போற்றும் திரு. மெ. சண்முகத்தை வாழ்த்துகின்றேன். இன்னமும் மேன்மேலும் நல்ல சிவநெறியும் நகரத்தார் பெருமையும் சிறப்பதாகுக.

தமிழண்ணல்.

உ

சிவமயம்

## வாழ்த்துரை

டாக்டர். திருமதி. **நா. வள்ளி**
பேராசிரியை.
இராமசாமி தமிழ்க்கல்லூரி,
காரைக்குடி.

அன்புத் தம்பி சண்முகம் அவர்கள் எழுதிய 11 கட்டுரைகள் அடங்கிய மன்னரை முந்தியோர் என்ற நூலை முழுவதும் படித்து மகிழ்ந்தேன். நம்மவர்களை 'மன்னர் பின்னோர்' என இலக்கியங்களும் வரலாறும் கூறும். ஆனால் நகரத்தார்கள் தங்களது தொழிலால், பண்பாட்டால், நாகரிகத்தால் மன்னர்களையும் முந்தியோராக இருக்கிறார்கள் என்பதை மிக அருமையாக கதைப் போக்கில் சண்முகம் அவர்கள் எடுத்துச் சொல்லி இருக்கிறார்கள்.

சமுதாய அக்கரையையும் அவரது எழுத்துக்களில் பார்க்க முடிகிறது. நாம் கட்டிய கல்வி நிலையங்களில் நமது இளைஞர்கள் நுழைய முடியாத நிலைமை, வேலைக்காகப் போராடுகின்ற போராட்டம் முறையற்ற முறைதலைகளினால் நம் இனத்துப் பெண்களின் திருமணச் சிக்கல்கள், 'ஒருவர் பொறை இருவர் நட்பு' என்பதை உணராத நிலையில் இன்று நம் சமூகத்தில் புற்றுநோய் போல் பரவலாகப் பரவிக்கொண்டிருக்கின்ற மண முறிவுகள் இவற்றை

யெல்லாம் கருத்தில் கொண்டு சமுதாயச் சிந்தனையோடு இளைஞர் சண்முகம் 'நாம் எங்கே செல்கிறோம்?' என கேள்வி எழுப்புகிறார். இத்தகைய சமுதாயப் பொறுப்பும் அக்கறையும் ஒவ்வொரு இளைஞரிடத்தும் இருந்தால் நிச்சயம் நம் சமுதாயம் பழைய உன்னத நிலையை அடையும்.

நகரத்தார் அனைவரும் கட்டாயம் படிக்க வேண்டிய நூல்.

சகோதரர் சண்முகத்திற்கு வாழ்த்துக்களும் பாராட்டுகளும்.

அன்புடன்,

**5.7.05**

**காரைக்குடி.**

வள்ளி சொக்கலிங்கம்.

# பாரம்பரியங்கள்

## 1. பிள்ளையார் சுழி சிவமயம்

உண்மை வழியில் உலகத்தோடு ஒன்றி வாழ்வோம் என்று உறுதி சொல்லி உலக ஜீவன்களைப் படைக்கும் சிவபெருமான் நாங்கள் தொடங்கும் நற்செயல்களையும் ஜீவனுள்ளதாகச் செய்ய வேண்டும் என்று வேண்டுவதே 'உ' சிவமயம்.

எந்த ஒன்றையும் விநாயகரை வணங்கி ஆரம்பிப்பதால் உறுதி மொழியைக் குறிக்கும் தொடரின் முதல் எழுத்தான 'உ' வின் சுழியைப் பிள்ளையார் சுழி என்கிறோம்.

எல்லாச் செயல்களின் தொடக்கத்திற்கும் பிள்ளையார் பிடிப்பது போலத்தான் பிள்ளையார் சுழி போடுவதும் ஆனால் சிவமயம் அப்படி அல்ல. அசுப செயல்களைக் குறிப்பிடும் இடங்களில் சிவமயம் என்று எழுதப்பெறுவது இல்லை. சுப செயல்களைக் குறிப்பிடும் இடங்களில் மட்டுமே சிவமயம் என்று எழுதுகிறோம். சுப செயல்கள் தாமே ஜீவனுள்ளதாக இருக்க வேண்டும். சிவம் சீவம் என்றால் உயிர் என்ற பொருளும் இருப்பதால் தான் பெரியவர்கள் சிவமயம் என்று நல்லதுக்கு மட்டுமே எழுதி நம்மையும் பழக்கினார்கள்.

நாம் அனைவரும் ஆதி காலத்திலிருந்தே இதை உபயோகித்து இதன் பெருமைகளைப்போற்றி பின்பற்றி வருகிறோம்.

நம் வேதங்களிலிருந்தும் இதிகாசங்களிலிருந்தும் பண்பாடுகளிலிருந்தும் எடுக்கப்பெற்ற நீதிக்கருத்துகளே சட்டங்கள் ஆயின. நீதி மன்றத்தில் சட்டப்புத்தகத்தின் மீது வாங்கப்பெறும் முதல் உறுதிமொழி (சத்தியம்) ஏன் பிள்ளையார் சுழி போட்டு எழுதுவதை அடிப்படை வழக்கமாகக் கொண்ட நம் மரபிலிருந்து எடுத்ததாக இருக்கக்கூடாது? நிச்சயமாக எடுத்ததாகத்தான் இருக்க வேண்டும்.

## 2. சிற்பக்கூடமும் கண்ணாடி மாளிகையும்

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை பர்மா, மலேயா, செய்கோன், இலங்கை முதலிய நாடுகள் நமக்கு வளம் சேர்த்தன. அந்த வளங்களை நம் வீடுகள் பிரதிபலிக்கின்றன. வீடுகளும் பற்பல மாற்றங்களைப் பெற்று, இன்று நமக்குத் தெரிய ஆறாவது கட்டமான அடுக்கு மாடிக்குடியிருப்புக் கட்டிட நிலைக்கு வந்திருக்கின்றன.

முதற்கட்ட வீடுகளாக நாம் பார்ப்பது கிட்டத்தட்ட 1850 க்கு முன்பு வரை கட்டப்பெற்ற வீடுகள் இவை ஊருக்கு ஒன்று அல்லது இரண்டு இன்றும் அரிதாக இருக்கின்றன.

இந்த வீடுகள் தரையை ஒட்டினாற் போன்று தள உயரம் குறைவாகவும் அறை நிலைகள், சிறிதாகக் குனிந்து போவது போன்றும் பத்திகள் அகலங்குறைவாகவும் வாசல் பெரியதாகவும் ஆழங்குறைவாகவும் கம்பி அடைப்பு இல்லாமலும் சிறப்பான மரவேலைப்பாடுகள் பெறாமலும் முட்டை வெள்ளைச் சுவருடன் நாட்டோடு பெற்று சில வீடுகளில் சாணி போட்டு மெழுகும்படியாக மண் தரையுடன், இனிச் சொல்லப்பெறும், 2,3,4 ஆங்கட்ட வீடுகளைப் போல மனையடி சாஸ்திர முறைப்படி சூரிய பத்தி பெற்று இரட்டை வீடுகளுடன் மிகப் பழமையாகக் காட்சியளிக்கின்றன.

இரண்டாவது கட்ட வீடுகள் கிட்டத்தட்ட 1850-1925க்குள் தோன்றின. அந்த நாளில் அதாவது 1900ல் நமது 96 ஊர்களில் (இன்று 74 ஊர்கள் உள்ளன) எதாவது ஒரு ஊருக்கு கற்பனையில் நாம் ஒரு Visit செய்கிறோம்.

கிழக்கு மேற்காக எதிர் எதிரே ஓங்கி உயர்ந்த கம்பீரமான தோற்றத்துடன் காட்சியளிக்கும் அரண்மனை போன்ற வீடுகள் எந்தக்கடலும் பெருக்கெடுத்து உட்புகாவண்ணம் அமைந்த நெடும்படிகள் அணிவகுக்கும்

தென்வடலோடிய வீதிகள் பஞ்ச வர்ணம் தீட்டப்பெற்ற கஜலெஷ்மி கொலு வீற்றிருக்கும் வளைவுகள், வளைவு முகப்புகள், வளைவுகளைத் தாங்கும் அழகுத் தூண்கள் அலங்கார ஜன்னல்கள் வெந்நிறச் சுவர்களில் வண்ணத் தோரணங்கள் விலாசங்கள் விளக்குகின்ற கதவுகள் ஒரு நிமிடம் திகைக்கின்றோம். இது இந்திர லோகமா? குபேர புரியா? புரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் தெரிகிறது. இது வெளித்தோற்றம் மட்டும்தான் என்று. 'உள்ளே சென்று பார்த்தால் எப்படி இருக்கும்?' என்று நம்மில் ஒருவர் வினவ, ஒரு வீட்டினுள் நம்முடன் வந்த பானாழானா நம் எல்லோரையும் அழைத்துச் செல்கிறார். நாமும் லாப நட்டம் சொல்லிப்படி ஏறி லாபத்தில் அடி வைத்து உள்ளே செல்கிறோம்.

முகப்புத்திண்ணையில் பழுத்த சிவப்பழமாகச் சட்டையணியாது காட்சி தருகிறார் 75 வயது ஆனாரூனா நம் அனைவரையும் கண்டவுடன் வாங்க, வாங்க என்று வரவேற்று அமரச் செய்கிறார். இரண்டாங்கட்டுப் பக்கம் பார்த்து ஏங்கிறேன் என்று ஆச்சியை அழைக்கிறார். அவர்களோ என்ன... என்று கேட்டுக்கொண்டு வருவது மெல்லியதாகக் கேட்கிறது. அவர்களும் வந்து நம்மை வரவேற்று முறுக்குவடையும் அதிரசமும் எடுத்து வைக்கிறார்கள். நாமும் சாப்பிடுகிறோம். 'என்ன பானாழானா சௌரியமா இருக்கியல்ல பாத்து ரெம்ப நாளாச்சு எங்ய... எல்லாரும் இந்தப்பக்கம்' என்று ஆனாரூனா தன் நண்பர் பானாழானாவைக் கேட்க, 'சௌரியந்தான் நீங்யளும் சௌரியந்தானெ! அப்புறம் காவன் ராவண்மானா மூனா வீட்டுக்கு மாப்ள வீடு வந்தம் பையன் எங்க பங்காளி இவுகல்லாம் எங்க பங்காளிய ஊரச் சுத்திப்பாக்கணும்னாக. வந்தம் ஒங்க நெனப்பும் வந்துச்சு. அதான் ஒங்க வீட்டுக்கே கூட்டியாந்திட்டேன்.' என்று பானாழானா சொல்ல

நம்மவர்களில் ஒருவர், 'அண்ணே ஒங்க வீடு ரொம்ப அழகாருக்கு நீங்ய கட்னதா? எப்பக்கட்னது?' என்று கேட்க அதற்கு ஆனாரூனா 'நாங்கட்னது தான். அஞ்சு வருஷம் ஆச்சு எங்களுக்கு ரெங்கோன்ல கடை....' உடனே மற்றொருவர் நாளக்கித்தான் சீட்டுப் போடுறம் பொழுது போகலை அதே நேரத்ல எனக்கு ரெம்ப நாளா ஒரு சந்தேகம். அதான் நம்ம வீட்டு அமைப்போட சிறப்பு என்னன்னு.. சிரமம் இல்லைன்னா சொல்லுங்க, நீங்ய வீடு கட்னதுனால ஒங்களுக்குத் தெரியும். நாங்களும் தெரிஞ்சுக்குறம்' என்று இழுக்க, ஆனாரூனா 'நல்லா நல்லா நம் வீடுகள நம்ம நாட்டோட சீதோஷ்ண நெலைக்கி ஏத்தாப்ல கட்றம். அணா பைசாக் கணக்குப்பாக்கிற நாம இவ்வளவு பணத்தப்போட்டு வீட்டக்கட்டி பணத்தை மொடக்குறது முட்டாள்தனமோன்னு நெனக்யலாம். ஆனா அதான் இல்ல. இதமாதிரி நம்ம ஒவ்வொருத்த ஐயாவும் அப்பச்சியும் கட்டியிருக்காகங்றத மறக்கப்புடாது. இப்படிக் கட்றதுனால நாம இத விட்டுட்டுப் போகமாட்டம். அதோட யாரும் ஒருதல விட்டு ஒருத பிரியமாட்டம். அதுக்கும் மேல விசேடம் பண்ண ஆள் பேர் தங்கக் கொள்ள வசதியா இருக்கும்ல்ல. இப்படிக்கட்றதுலயும் பாருங்க நாளக்கி எல்லாமே வெல போகும். நாம கெட்டிப்புள்ள இல்லயா? அதனாலதான் இதமாதிரி நவரத்னத்லயும் குறிப்பா வைரத்லயும் தங்கம் வெள்ளி, வெங்கலம், மங்கு, மரமுன்னு பின் வரவு வர்ற மாதிரி எல்லாத்லயும் கலந்து மொதலீடு பண்றம். அது இருக்கட்டும் வீட்டுக்கு வருவம். ஒரு காலத்ல நாமல்லாம் இங்க வர்றதுக்கு முன்னாடி சமுத்திரம் பெருகி திருப்புவனம் வரை அழிஞ்சிருச்சாம். அதுனால நம்மள பாண்டியராஜா ஒயர ஒயர வீடு கட்டி இருக்கச் சொன்னாராம். அதுக்குப்பின்னால தளம் ரெம்ப ஒயரமாப்போடாமயும் கட்டியிருக்காக நம்ம பூமியே ஒயரமாத்தானே இருக்கு.

நா நெனைக்கிறேன் 60, 70 வருஷதுக்கு முன்னாடி ஒருக்கா சமுத்திரம் பெருகிருக்குமோன்னு. ஏன்னா அதான் இப்பப்ப கட்ற வீடுகள ரெம்ப ஒயரமாவே கட்றாக. இவ்வளவு ஒயரத்தளம் போடுறதோட களவாணியும் கண்ணக்கோல் வைக்ய முடியாமக் கட்றம். வீடு நெலச்சு இருக்கணும்கிறதுக்குத் தான் நெலக்கிப்பேரு நெலைன்னு வந்துச்சு நெலய மகாலெட்சுமின்னுஞ் சொல்லுவாக. அதுனாலயோ என்னவோ ராஜ நெலய தெரு நெலயா வக்யாம உள் நெலயா வக்கிறது. நெல அதுல உள்ள மகாபாரத ராமாயணத்தச் சொல்ற கீதா உபதேசம் ராமர்பட்டாபிசேகம், தேர், யாழி முன் காலத்தூக்கி நிக்கிற குதிரை மாதிரி எழுதகம் கதவு ஜன்ன மத்தபடி எல்லாம் பர்மாத்தேக்ல செய்றது. பர்மாவ்லயிருந்து மரத்தத்தெப்பங்கட்டி விலாசம் போட்டு கப்பல்ல கட்டி விட்ருவாக அது துறமுகத்ல வந்து கெடக்கும் அங்கேருந்து வண்டீல எடுத்தாந்து யானை புடிக்ற குழி மாதிரித் தோண்டி அதுல போட்டு வாளால அறுத்து அப்பறம் பண்றது. தண்ணி வெயில் ரெண்டுலயும் கிடக்கிறதுனால தான் கதவு கிதவு எல்லாம் மழ தண்ணிக்கித் தெகிட்டாம இருக்கு.

மத்தபடி வெளித்திண்ண உள்ள ஆளு வீடு இல்லாட்டி பட்டால இல்லாட்டி மேப்பத்தி வளவு, வாசு, ரெட்டவீடு, கல்யாணக்கொட்டக, ரெண்டாங்கட்டு, மூனாங்கட்டு, அடுப்படி, தோட்டம், மே வீடுக, ஒத்த அற, படிய மாதிரி ஒத்தப்பட வர்ற நெலய, தரைக்கி ஆத்தங்குடிக்கல்லு இதுகதான் உங்களுக்குத் தெரியுமே! இதுல என்ன ஒரு இதுபாருங்க இந்தச் செவருக்கு முட்ட வெள்ளச்செவருன்னு பேரு. முட்ட வெள்ளக்கரு சுண்ணாம்பு க்கிளிஞ்சி, கருப்பட்டி இதுமாதிரியல சேக்ற வெதத்ல சேத்து ஒயரமான மெய்க்காட்டாளு நீளக்கையிக்கி ஏத்த மாதிரி இழுத்து அறச்சுப் பூசி எட்டு மொள வேட்டிய வச்சு நைசு பண்றது. அதுனாலதான் வழுவழுன்னு இருக்கு.

உள்ள உள்ள கட்டு $1\ {}^{1}/_{2}$ அடி $1^{3}/_{4}$ அடி, 2 அடி கூட இருக்கும். இத்தனைக்யும் இது கழுத களிமண்ணுதான் ஆனா அதயும் அரச்சு சுட்டகல் வச்சுக்கட்றதால இரநூறு முன்னூறு வருஷத்துக்கும் மேல நிக்யுமாம். மொறையாப் பாதுகாக்கிறதப் பொறுத்து இருக்கு. மதுர நாயக்கர் மகாலப் பாருங்க. அதுல உள்ள கட்டுமான அமைப்புதான் கிட்டத்தட்ட நம்ம வீடுகள்லயும் இருக்கு. அது எத்தனை நூறு வருஷமா இருக்கு. ஆனா அது மாதிரிக் காலத்துல கட்ன நம்ம வீடுகள்லாம் நமக்குள்ள ஒத்துமை இல்லாததுனால தான் செதஞ்சு போயிருக்கோணும். பழக்க வழக்கத்துல நல்லா இருக்குற நம்ம எல்லார்ட்டயும் உள்ள பெருங்கொறை சண்டயும் சச்சரவுந்தான் ..... ம் ப்ச் எப்புடி இருந்த கோட்டை எல்லாம் போச்சு.

ரிஷியளும் முனிவர்களும் வீடுங்றது கெரகங்கள உள்ளடக்குண ஒலகம் மாதிரிங்றாக. இன்னஞ்சில பெரியவுக வீடுங்றது நம்ம ஒடம்பு மாதிரி. வாசங்றது வயிறு மாதிரி. சாமி வீடுங்றது நம்ம மனசு அதான் நெஞ்சு மாதிரிங்றாக. 4 மூலயும் வளஞ்சு ஒன்னு சேர்றதுதான் வளவு. வளவு வாசலப் பாருங்க இந்த வளவு வாசன்னு இல்ல, எந்த வீட்டு வளவு வாசல்னாலும் பாருங்க மொகப்பு எங்கிட்டுப்பாத்தாலும் சரி இது கிழக்கு மேற்காத்தான் இருக்கும். வானந்தெரியாத வீடு கூட இப்படித்தான் இருக்கும். இதுதான் நம்ம சிறப்புலயுஞ் சிறப்பு. இதுக்கு சூரிய பத்தின்னு பேரு. அதாவது கிழக்கு மேற்கா நீளமாவும் தெற்கு வடக்கா சிறிசாவும் இருக்கும். இப்டி இருக்கிறதால வம்ச அபிவிருத்தி ஏற்படுமாம் ஆண் வாரிசுக்குக் கொரச்சல் இருக்காதாம். சூரியன் ஆண் கெரகம் இல்லயா? அதுனால.

சூரிய நமஸ்காரம் பண்ணலாம். அதவிட வெயில் வெளிச்சம் நல்லா வருது. நம்ம மேல சூரிய வெளிச்சம் விழுறது நல்லதுதானெ? எல்லாத்துக்கும் மேல வத்தப்போட

வசதியாயிருக்கு. ரெட்ட வீடுகளப்பாருங்க ஒத்த வீடுக, அறையன்னாத்தான் என்ன எதுன்னாலும் சரி அதுக எல்லாமே எண்ணிக்கையில ரெட்டப்பட்டயாவும் சூரிய பத்தியாவுந்தான் இருக்கும். எதுலயும் ஒத்தய விரும்புற நம்ம ஆளுக இதுல ரெட்டப்பட்டயா இருக்கணும்கிறாக. ஏன்னா ஒத்தயவிட ரெட்டயோட பெருக்கம் அதிகமில்ல. அதுமாதிரிப்புள்ளய பெருகணுமாம். இது மாதிரித்தான் கோலமிடுறதுலயும் ரெட்ட வரிசப்புள்ளிய நெருக்கிக்குத்றது. கோலமும் அந்தந்த விசேடங்களுக்காகக் கட்ற புதுவீடு மாதிரித் தான். நாம எல்லாருஞ்சேந்து பெருகி நெருக்கமா இருக் கணுங்கிறதுக்குத் தான் அப்புடீ. சரீ..., எங்க விட்டம்? வளவு வீடு. வீடுகளப்பாருங்க சில வீடுகள்ல 2 பக்கமும் ரெட்ட வீடும், சில வீடுகள்ல ஒரு பக்கம் மட்டும் ரெட்ட வீடுகளும் இருக்கும். ரெண்டு பக்கமும் ரெட்ட வீடு உள்ள வீடவிட்ருங்க 1 பக்கம் ரெட்ட வீடுக உள்ள வீடப்பாருங்க பெரும்பகுதி வீட்டுக்கு வலதுபக்கமாத்தான் இருக்கும். சில இடங்கள்ல எடது பக்கமா இருக்கும்.

அடுத்துச்சாமி வீடு முகுந்து கெழக்கபாத்த வீடுன்னா வடக்குப்பாத்துச்சாமி வீடும் மேற்க பாத்த வீடுன்னா தெக்குப்பாத்துச்சாமி வீடும் இருக்கும் நாலு வீடு இருந்தா அதுல நடுவீடா சாமி வீடு இருந்தா விசேசம்பாக சுருக்கமாச் சொன்னா சாமி வீடு வீட்டுக்குள்ள நொழையுறவுகளுக்கு எடது கைப்பக்கமா இருக்கும் இங்கயும் பாருங்க இடமிருந்து வலமா பூமி சுத்துரதத்தான் சொல்றம்.

எட்டுத் தெசயையும் அதுக்குள்ள தெய்வங்களையும் ஒம்போது கெரகங்களயும் அடிப்படயா வச்சுத்தான் மனையடி சாஸ்திரம் பாக்ரது அதத்தான் வாஸ்த்துங்கிறாக. அதப்பாருங்க வடகெழக்கு மூலைங்கிற ஈசான்ய மூலைக்கி அதிபதி மங்களகரமானவரு ஞானகாரரு துன்பத்த வெரட்ரவரு அப்படிங்கிறாக. அதுனால தான் முகூர்த்தக்கால் ஊன்றது.

கால்கோல் நடத்றது எல்லாத்தயும் அங்கண பண்றம். அக்னி மூல வாயு மூல குபேர மூல ஈசான்ய மூல எல்லாத்தயும் அனுசரிச்சுத்தான் வீடு கட்றது. கேணி பாருங்க வடகெழக்கு மூல அல்லது தென்மேற்கு மூல அல்லது ரெண்டுலயுமே இருக்கும். நம்ம வீடுகளுக்கு அழகு சேக்கிறதுல இந்தப்பட்டியக்கல்லும் ஒன்னு. இது திருமயத்துக்குப் பக்கத்துல பள்ளப்பட்டீங்ற ஊர்லதான் வாங்குறது.

செவரைப்பத்திச் சொல்லிக்கினே இருந்தேன் மறந்துட்டனே! இந்தச் செவருல உள்ள அரச்ச களிமண்ணு சுட்ட கல்லு சுண்ணாம்பு மழ காலத்ல விழுகிற தண்ணிய உறிஞ்சி வச்சிக்கும் கருப்பட்டியும் முட்ட வெள்ளக்கருவும் வரவரன்னு புடிச்சிக்கும். அதே நேரத்ல களவாணிக்காக மட்டுமுன்னு நாம நெனைக்கிற நெருக்கத்தேக்கம் பட்டியலும் மச்சடப்பும் நாட்டோடும் மழத்தன்மையவோ பனியவோ உள்ள விடாது. கதகதப்பா இருக்கும் அதே நேரத்ல வேர்க்கவுஞ்செய்யாது. வெயில் காலம் வந்ததும் அடிக்கிற வெயில்ல செவரு கொஞ்சம் கொஞ்சமா தண்ணியமூச்சு விடும். நாட்டோடும் காத்த விடும். ரெம்ப நல்லாயிருக்கும்.

வாசக்கம்பி இல்லைண்ணா நம்மலால எங்கயும் போகக்கீக முடியாது. இப்பேர்ப்பட்ட நம்ம வீடு களுக்குத்தான் எத்தன பட்டப்பேரு?

இதுமாதிரித்தூண் ஒவ்வொண்ணும் ஒவ்வொரு கதை சொல்லுமெ. ஆமா எத்தனை வள்ளல்கள் தொழில் மேதைகள் தியாகிகள் கவிஞர்கள் ஏன் பண்டிதர்கள் கூட சுத்தி விளையாண்ருப்பாக.

இந்த மாதிரிப்பட்டாலையுந் திண்ணையுந்தான் எத்தனை கல்யாணத்தப் பாத்திருக்கும் இந்த இடங்கள்லதான் எத்தனை பள்ளிக் கொடத்துக்குப் புள்ளையார் சுழி போட்ருப்பாக. எத்தன மில்லுக்கு பிளான்

போட்ருப்பாக. எத்தன தங்கக் கொடத்தயும் தங்கச் சட்டியையும் அழகு பாத்திருப்பாக. வேறெங்ய மோதிரத் தப்படியால அளந்தும் வைரத்த ஒழக்கால அளந்தும் புள்ள யலுக்குக் குடுத்திருப்பாக. இல்ல இந்தப் போஜனால்க பாத்த வெள்ளிப் பந்தி அடுக்கயும் பந்திக்கி வச்சது போக மிஞ்சின வெள்ளிப்போகணியையும் எண்ணத்தான் முடியுமா? எத்தனை பேர் வீட்டு மே வீட்டுச் சீட்டி ரூவா நோட்ட மண்ணெண் ணத்தகரத்துல பாத்திருக்கும்.

சரீ... பேசிக்கினே இருந்தா நேரம் போறது தெரியாது. டயம் ரெம்ப ஆச்சு. ராத்திரிப்பலகாரத்துக்கு எல போட்டாலும் போட்ருவாக. நாளப்பின்ன வாங்க வெரட்றேண்ணு, நெனக்யாதிய ஒங்களுக்குச் சாப்பாடு தட்டுக் கெட்டுப்போகுமுன்னுதான் சொல்றேன். என்று சொல்லிமுடிக்க, நாமும் அது சரி அது சரி பொயிட்டு வர்றோம். ஆச்சியிடமுஞ் சொல்லுங்க என்று புன்முறுவலுடன் சொல்லி,

கனத்த உத்திரங்களும் உரத்த கைகளும்
இருபத்துக்கால் வளவும் யானைஅடிக்கல் வாசலும்
நித்தம் அலங்கரிக்கும் நிமிர்ந்த தேக்கந்தூணும்
சந்திர நிலவும் கொண்ட கூடம்

என்று கவிபாடி அந்த வீட்டை விட்டு வெளிவருகிறோம்.

இங்ஙனம் கற்பனையில் கண்ட உண்மைகளாம் நமது சிற்பக்கூடங்களை அடுத்து அதாவது 1925 லிருந்து 1940, 45க்குள் மூன்றாவது கட்ட வீடுகளான கண்ணாடி மாளிகைகள் தோன்றின. எண்ணிக்கையில் சற்றே குறைந்து இருக்கின்ற இந்த வீடுகள் இரண்டாங்கட்ட வீடுகள் மர வேலைப்பாடுகளுடன் திகழ்ந்தால் நாங்கள் கண்ணாடி யாலும் கருங்கற்களாலும் போட்டிபோடுவோம் என்று சொல்லுகின்றன. எப்படித்தான் இருக்கிறது என்று பார்ப்போமே!

ஆளுயரத் தளமும் விண்முட்டும் உச்சியும்
கால் வலிக்கப்படிகளும் வரவேற்கும் பெரியவளைவும் நந்தவனமும்
உட்செல்ல வருமாம் முகப்புந் திண்ணையும்
ஜன்னலிலே வண்ணக்கண்ணாடி சுவற்றினிலே பால்வெண்மை
நமைக்காட்டும் கண்ணாடியாம் அலமாரியும் ஆளுவீடும்
வழுக்கவைக்குந்தரையும் புரக்கிளடுத்த கருங்கல்தூணுந் திண்ணையும்
கருப்புவெள்ளைத் தரையூடே மயிலாடும் ரோஜாசுவர்கள்
சூரியபத்தி வளவுவாசல் உருளைத்தூணுடே வாகனபட்டியல்கள்
மச்சடைப்புக்கு விடைகூறும் மெட்ராஸ் டெரஸ்
இரட்டைவீடு ஒற்றைவீடாகி இருபுறமும் அணிவகுக்க
மேவீடும் வளவோ! பத்திபோல வரண்டாவோ!

என்று திகைக்க வைக்கும் சீமை ஓட்டுச் சித்தன்ன வாசலில் புகழ்பரப்பும் வெள்ளைப்பனியாரம் 'செட்டிநாடு செட்டிநாடு' என்று சொல்ல உள்வாங்கும் போஜனஹால். உண்மைதான். அது சிற்பக்கூடம் என்றால் இது கண்ணாடி மாளிகைதான்.

இப்படியாக மூன்றாங்கட்ட வீடுகள் தோன்றிய காலத்தில் சிறிய எஸ்ட்டிமேட்டுகளுடன் நான்காம் கட்ட வீடுகளும் தோன்றின. இவை நடுத்தரமான உயரங் கொண்ட தளத்துடன் முட்டை வெள்ளைச் சுவருகள் மரவேலைப்பாடுகள், கண்ணாடி கருங்கல் வேலைகள் இன்றி சீமை ஓடு, மெட்ராஸ் டெரஸ் கொண்டு சூரியபத்தி வளவு வாசல் இரட்டைப்படை எண்ணிக்கையில் ஒற்றை வீடுகளுடன் கண்கவரும் வண்ணங்கள் தீட்டப்பெற்று மனையடி சாஸ்திர முறைப்படி கட்டப்பெற்றன. இந்த மாதிரிக்கட்டிடங்கள் 1925 லிருந்து 1969, 70 வரையே கட்டப்பெற்றன என்று சொல்லலாம்.

இந்த நான்காம் கட்ட வீடுகள் வரை நம் சமூக வீடுகள் பிற சமூகத்தார் வீடுகளிலிருந்து தனித்துக் காணப்பெறுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது இந்த வீடுகளோடு நம் பாரம்பரியத்தைக் கட்டியங் கூறும் வீடுகள் அதாவது

நம்மைப்பிறரிடமிருந்து பிரித்துக்காட்டும் வீடுகள் தோன்றவில்லை என்றே சொல்லலாம். அதன் பிறகுதான் ஐந்தாங்கட்ட வீடுகளான பங்களா வீடுகள் பரவலாகத் தோன்றின. இவை நகர்ப்புற ஊர்களில் ஏராளமாகத் தோன்றிவிட்டன. கிராமங்களில் குறைந்த வேகத்தில் தோன்றி வருகின்றன.

நகர்ப்புறங்களில் நம் வீடுகள் இருந்த இடத்தில் பிற சமூகத்தினர் வீடுகள் தோன்றி நாம் அவர்கள் பக்கத்து வீட்டுக்காரர்களாகவும் சில இடங்களில் நம் வீடு இருந்த இடத்தில் நாம் இல்லாமல் வேறு இடங்களுக்குச் சென்றும் இருக்கிறோம். நம் வீட்டுப் பழைய கால நான்கு மாலைப் பாருங்கள். கிழக்கில் அண்ணாமலை செட்டியார் தோட்டம் மேற்கில் குமரப்பசெட்டியார் வகையறா பொதுவீடு தெற்கில் ப.வீர. வீடு வடக்கில் கிழமேல்வீதி என்று இருக்கும். ஆனால் **1970, 72** க்குப் பிறகு நான்கு மால் பேசுவது நாம் அனைவரும் அறிந்ததே! இந்த நிலை கிராமங்களில் அவ்வளவு இல்லை. நகரம் என்ற நரகத்தில் தான் பெருகி வருகிறது. இங்கேதான் முதுகு வலிபோய் திருகு வலி வந்தது போல கிடைமட்டப்பங்கு வீட்டுக்குப் பயந்து செங்குத்துப் பங்கு வீட்டுக்கு அதுதான் ஆறாவது கட்டமான அடுக்கு மாடிக்குடியிருப்புக்கு வரவேற்பு வழங்குகிறோம்.

இவ்வாறாக நாம் நமது ஊர்களில் இந்த ஆறு வகையான கட்டிடங்களிலும் இன்று வாழ்ந்து வருகிறோம். இந்த ஆறில் முதல் நான்கு கட்ட வீடுகள் மட்டுமே முன் சொல்லியது போல அடிப்படை அமைப்பில் ஒரே மாதிரியாக அமைந்து நம் பாரம்பரியச் சிறப்புகளைப் பிறரிடமிருந்து பிரித்து நம்மைப்பெருமை பெறச்செய்து புகழ் பரப்புகின்றன. இப்புகழ்பரப்புதலுக்கு இரண்டாங் கட்ட வீடுகளான சிற்பக்கூடங்களும் மூன்றாங்கட்ட வீடுகளான கண்ணாடி மாளிகைகளும் போட்டி போட்டுக் கொண்டு தலைமை தாங்குகின்றன.

## 3. படைப்பும் ஒரு திருவிழாவே

படைப்பு என்ற சொல் படையல் என்ற பெயரில் பன்னெடுங்காலந்தொட்டே நம் தமிழ் நூல்களில் இடம் பெற்றிருப்பதை அறிகிறோம். இன்றும் பிற சமூகத்தினர் படையல் என்ற சொல்லை உபயோகித்து வருவதையும் நாம் பார்க்கிறோம். திருப்பூட்டுதல் என்ற சொல்லை நாம் மட்டும் உபயோகிப்பது போலத்தான் படைப்பும். ஆக இது இறைவழிபாட்டோடு இணைந்த சொல் என்பது நமக்குச் சொல்லாமலேயே விளங்கி விடுகிறது.

நம் குடும்பங்களில் இறந்தவர்களை நினைத்து வணங்கும் படைப்பும் கிராம தெய்வ வழிபாடும் ஒன்றே! ஆம் படைப்பு வீடு என்பது நம் சமூகத்தில் படைப்பு நடைபெறும் வீடு. கிராமக்கோவில் என்பது பிற சமூகத்தில் இறந்தவர்களை வணங்கும் இடம். இந்த இடம் நினைவாலயமாகவோ சமாதியாகவோ இருக்கும்.

கிராமக்கோவில்களில் என்னென்ன நிகழ்ச்சிகள் நடக்கின்றனவோ அத்தனை நிகழ்ச்சிகளும் நம் படைப்பு வீடுகளிலும் நடக்கின்றன கிராமக்கோவில்களில் நடைபெறும் தினசரிப் பூசை போல நம் படைப்பு வீடுகளில் தினமும் திருவிளக்கு ஏற்றுகிறோம். அங்கு நடைபெறும் திருவிழாதான் நமது சாமிக்குப் படைப்பது அங்கு போலவே இங்கும் மாலை மரியாதை ஆடை அலங்காரம் ஆபரணம் (அடையாளம்) எல்லாம் உண்டு. அதனாலே தான் நம் படைப்பு வீடுகளைக் கோவில் வீடு என்றும் சொல்கிறோம்.

நாம் சிறுபான்மையினராக இருப்பதாலும் பிறரை மதிக்கும் நற்குணம் பெற்றவர்களாக இருப்பதாலும் பிற சமூகத்தெய்வங்களைக் (கிராம தெய்வங்களை) காவல் தெய்வங்களாகக் கொண்டு அவர்களுக்கு விதைப்பு நெல் வழங்கி, பேழை துவைத்துப் படைக்கிறோம்.

படைப்பு, அவரவர் வழக்கப்படி மரக்கறிப் படைப்பாகவோ, மாமிசப்படைப்பாகவோ இரண்டும் கலந்த படைப்பாகவோ இருக்கிறது. சில இடங்களில் மாமிசப்படைப்பு காலப்போக்கில் மரக்கறிப்படைப்பாக ஆகி விடுகிறது.

இறந்தவர்களின் ஆத்மாக்கள் சாந்தி அடைவதற்காகத்தாம் நாம் படைக்கிறோம் அவர்களின் ஆத்மாக்கள் சாந்தி அடைகின்றன என்பதை விட நம் ஆத்மாக்கள் சாந்தி அடைகின்றன என்று தான் சொல்லவேண்டும். எப்படி என்று கேட்கிறீர்களா? இறந்தவர்களின் ஆத்மாக்கள் சாந்தி அடைய நாம் படைத்தால்தாம் நமக்கு நன்மை என்ற கருத்து நம் குலத்தில் ஆதிகாலம் முதற்கொண்டே வேரூன்றி விட்டதால் நம் மனமும் அதைப்பதிந்து கொண்டு Psycological Formalities ஆகிவிட்டது.

நெய்வேத்தியத்தில் சர்க்கரைப் பொங்கல் முதலிடம் பெறுவது போலப் படைப்பில் பணியாரமோ பாச்சோறோ (பாலும் சர்க்கரைப்பாகும் கலந்து சேர்த்து ஆக்கிய சோறு) ஏதேனும் ஒன்று சிறப்பிடம் பெறுகிறது.

படைப்புத் தெய்வங்களுக்கு அபிசேகம் செய்வதாகப் பாவனை செய்து, எண்ணெய் சிகைக்காய் தண்ணீர் முதலியவைகள் வைக்கப்பெற்று வணங்குகிறோம். பிறகு புத்தாடை அணிவித்து அணிகலன்கள் அணிவித்து மலர் அலங்காரம் செய்து படையல் இட்டு சகல தீப தூபங்களுடன் அவரவர் வழக்கப்படி வணங்குகின்றோம்.

படையல் இட்ட உணவு, தெய்வங்களின் எச்சில் பட்ட உணவாகும். இதை நாம் உண்பதால் நமக்கு உள்ள நோய்கள் எல்லாம் நீங்கி நாம் ஆரோக்கியம் பெறுவோம் என்பது நம்பிக்கை இது மாதிரியானது தான் கணவன் உண்ட இலையில் மனைவி உண்பது. முன்பு இது பரவலாக இருந்தது.

நாகரிக உலகில் இது வெறுக்கப்பெற்றுவிட்டது. இந்த மாதிரி 4 பேர் ஒரே தட்டில் (சகனில்) சாப்பிடுவது பெரும்பாக்கியம் என்றும் நோய்கள் நீங்குகின்றன என்றும் இஸ்லாமிய நண்பர்கள் இன்றும் நம்பிக்கையுடன் விரும்பி உண்கின்றனர்.

12 வயதுக்குள் இறந்த ஆண் பெண் குழந்தைகளும் 60 வயதில் ஆண்களின் ஆத்மா சாந்தி அடைந்து விடுவதால் திருமணமானது முதல் 60 வயதுக்குள் இறக்கும் ஆண்களும் திருமணமானது முதல் வீட்டுக்கு விலக்கு முடியும் காலத்திற்குள் (Meno Pause) இறக்கும், சுமங்கலிப் பெண்களும் படைப்பு கேட்பதாக நாம் உணர்ந்தால் இறந்து ஒரு ஆண்டு முடிந்த பிறகு படைக்கின்றோம். குமரப்பருவத்தினர் (Teen age) இறந்தாலோ கணவனை இழந்தவர்கள் இறந்தாலோ படைப்பது இல்லை.

கணவனை இழந்தவர்கள் ஆத்மா, தாமாகவே சுபகாரியங்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டு விடுவதால் அது படைப்பு கேட்பதில்லை. சிற்சில இடங்களில் அரிதாக இவர்களுக்கும் படைப்பு நடைபெறுகிறது. குமரப்பருவம் என்பது இல்லறத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளாத பருவம் அதே நேரத்தில் குழந்தைப் பருவத்திலிருந்து மாறுபாடு அடைந்தது. எனவே படைப்புத் தெய்வ நிலையை அந்த ஆத்மாவிற்கு வழங்குவது இல்லை. இவைகளில் இடத்திற்கு இடம் சில மாற்றங்கள் இருக்கும்.

படைப்பிலேயே முக்கியத்துவம் பெறுவது வாழ்வரசிப்படைப்புதான். பேச்சு வழக்கில் வாவரசிப் படைப்பு என்று வழங்கலாயிற்று. வீட்டுக்கு விலக்கு உள்ள பெண்கள் தாம் நம் சமூகத்தைப் பெருக்கச் செய்யும் ஆத்தாள்கள் (அகத்தாள்கள்) அவர்கள் இறந்தால் அவர்களின் ஆத்மா, ஆத்ம ரீதியாகவும் உடல் ரீதியாகவும் நடத்துவதால் ஒவ்வொருவரும் ஒரு நிகழ்ச்சியை நடத்துவது எப்படி?

சாந்தியடையாது இருக்கும். அந்த ஆத்மாவை ஆன்மீக வழியில் தான் சாந்தி அடையச் செய்ய முடியும் என்பதை உணர்ந்தே நம் பெரியவர்கள் படைப்பை ஏற்படுத்தி இருக்கிறார்கள்.

அதுதான் மெச்சி ஆத்தா படைப்பு அழகாத்தா படைப்பு. தெவ்வி ஆத்தா படைப்பு இன்னும் எத்தனையோ ஆத்தாள் படைப்புகள்.

விலக்கு நிற்கும் (Meno Pause) காலம் வந்து விட்டால் பெண்களின் ஆத்மா உடல் ரீதியாகச் சாந்தி அடைந்து விடுகிறது. படைப்பு தொடங்கிய காலங்களில் மிகச்சிறுவயதில் திருமணம் நடந்து பிள்ளைகளுக்கும் கிட்டத்தட்ட திருமணம் முடிந்து Meno Pause (45 வயதுக்குள்) காலத்திற்குள் பெண்களின் ஆத்மா, ஆத்ம ரீதியாகவும் உடல் ரீதியாகவும் சாந்தி அடைந்திருந்தது. ஆனால் இன்றைய காலம் அன்றைய காலம் போல் இல்லையே!

சகல காய்கறிகளும் கிடைக்கும். தைமாசி மாதங்களிலோ ஆடி மாதத்திலோ அவரவர் வழக்கப்படி ஒரு குறிப்பிட்ட தினத்தில் புதன்கிழமை படைப்பும் வியாழக்கிழமை நெய்ச்சோற்றுப்படைப்பும் படைப்பு வீட்டிலோ வருடக்கணக்குப்பார்ப்பவர் வீட்டிலோ நடைபெறுகிறது. அடுத்தடுத்த இரண்டு விரும்பத்தக்க கிழமைகள் என்று எடுத்துக் கொண்டால் புதனும் வியாழனும் தான். அதனால்தான் படைப்பும் நெய்ச்சோற்றுப்படைப்பும் இவ்விரண்டு கிழமைகளில் நடைபெறுகிறது என்பதைத் தவிர வேறு எந்த பிரத்தியேகமான காரணமும் புதன், வியாழக் கிழமைகளுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. இப்படி இருக்கலாம் என்பது என் கருத்தே!

பொதுப்படைப்புகள் சுழற்சி முறையில் வாரிசு அடிப்படையிலோ, திருமணமானது அடிப்படையிலோ நடைபெறுகிறது. இப்படிப் பொது நிகழ்ச்சிகளை

அதிலும் திறம் பெறச் செய்வது எப்படி? என்ற பண்பைத்தாமாகவே பெற்று விடுகிறோம்.

நம் முன்னோர்கள் படைப்பை ஏற்றுக்கொண்டு நம் அனைவருக்கும் நல்லது படைக்கவேண்டும் என்று ஏகமனதாக வணங்குகிறோம். நம்மவர்களில் ஒருவர் அருள் வழங்குகிறார். அவர் உடம்பினுள் படைப்பு தெய்வங்களில் ஒன்று உட்புகுவதாக நம்பிக்கை கொள்கிறோம். இதில் அசாத்திய செயல்கள் கைகூடுகின்றன. இவை எல்லாவற்றையும் அறிவியல் முழுமையாக ஏற்றுக்கொள்ளாவிடிலும் அதுவால் முழுமையாக மறுக்கவும் முடியவில்லை. இவ்வளவு ஏன், முழுமையாக மறுத்த சுயமரியாதைக் கொள்கையால் ஈர்க்கப்பெற்ற நம்மவர்களில் பலரும் இங்கே வந்து சரணாகதி அடையவில்லையா?

நெய்ச்சோற்றுப்படைப்பு என்று மருவிய நீர்ச்சோற்றுப்படைப்பு முடிந்து நடைபெறும் ஏல நிகழ்ச்சி பலரின் நீண்ட நாள் கவலைகளைக் கலையும் அற்புத நிகழ்ச்சி. குழந்தை பிறக்கிறது. அதுவும் பாருங்கள் ஆண்குழந்தை பிறக்கிறது. மகளின் திருமணம் நடக்கிறது. தொழில் விரிவு பெறுகிறது. இவை போல் இன்னும் எத்தனை எத்தனையோ! இவை எல்லாம் நம்பிக்கை என்ற வடம் நகரத்தார் என்ற ஆழித்தேரை இழுத்துச் செல்வதாலேதான் கைகூடுகின்றன.



## 4. கழுத்துரு ஓர் உறுதிமொழிச் சின்னம்

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் பாரம்பரியச் சிறப்புகளை எடுத்தியம்பும் மங்கல அணிகலனே கழுத்துரு (கழுத்து + உரு) ஆகும்.

கழுத்துருவை அறியாத நம்மவர் எவரும் இலர் என்று சொல்லும் அளவிற்கு அது நம் சமூகத்தில் சமூக வாழ்க்கையில் சிறப்பிடம் பெற்றிருக்கிறது.

கழுத்திரு என்று பேச்சு வழக்கில் வழங்கப்பெற்று நல்லன அல்லன இரண்டிலும் பங்கு பெறும் கழுத்துரு முற்காலத்தில் நம் பெண்களின் அன்றாட மங்கல அணிகலனாகவும் இருந்திருக்கலாம் பிறகு பலவித சிரமம் கருதி 1900 வரை உள்ள கால கட்டப்பெண்கள் அன்றாடம் அணிவதற்கு இதற்குப் பதிலாக சிறுதாலி ஜோடிப்பு என்பதை அணிந்திருக்கிறார்கள். சின்னக்கழுத்துரு என்று வயதானவர்களால் வழங்கப்பெறும் இதற்கும் கழுத்துருவுக்கும் சிற்சில ஒற்றுமைகள் உள்ளன. இதை இன்றும் நாம் படைப்பு நகைகளில் பார்க்கலாம். இதற்குப்பிறகு 1980 வரை உள்ள கால கட்டத்தில் மணமான பெண்கள் அன்றாடம் ஜோடிப்புத்தாலியை அணிந்து வருகின்றனர். அதன்பிறகு மணமானவர்களின் அன்றாட மங்கல அணிகலனாக சிறுதாலி இருந்து வருகிறது. இப்படியாகக் கழுத்துரு, அன்றாடத் தேவைகளுக்கு ஏற்ப மாறி வந்திருக்கிறதை நாம் அறிய முடிகிறது.

கழுத்துரு என்ற கோர்வையில் மேற்பகுதி கீழ்பகுதி என இரண்டு பகுதிகளும் இரண்டு பகுதிகளிலும் சேர்த்து 31 உதிரி பாகங்களும் 3 தனி உதிரிபாகங்களும் இருப்பது நாம் அறிந்ததே!

இந்தக் கோர்வையும், கோர்வையைத் தாங்கி நிற்கின்ற நூலும், பகுதிகளும் உதிரிபாகங்களும் (உருப்படிகளும்) ஒவ்வொன்றும் ஒவ்வொரு காரணத்தை

ஏந்தி நிற்கின்றன. நம் முன்னோர்கள் இதற்கு விளக்கம் சொல்லிவிட்டுச் செல்லாததால் பின்வருமாறு இருக்கலாம் என்பது என் கருத்து.

கழுத்துரு என்ற கோர்வை ஒரு குடும்பம் போன்றது. நம் நகரத்தார் வழக்கில் சொன்னால் ஒரு புள்ளி இந்தக் கோர்வையைத் தாங்கி இருக்கும் நூல் 21 பாகங்களைக் கொண்டு 3 ஆக மடிக்கப்பெற்று ஒன்றுக்குள் ஒன்றாகக் கொடுத்து வாங்கப்பெற்று 7 பாகமாக ஆகி இருப்பது. இந்த (3X7பாகம்) 21 பாகம் 21 தலைமுறைப்பாரம்பரியத்தைக் குறிக்கிறது. இந்து மத சாத்திரத்தில் மூவேழு இருபத்தியோரு தலைமுறையும் உருவ வழிபாடும் முக்கியத்துவம் பெற்றுள்ளன. அது போலத்தான் இதிலும் முக்கியத்துவம் பெறுகிறது.

கழுத்துருவின் மேற்பகுதி மணமகளையும் கீழ்பகுதி மணமகனையும் குறிப்பிடுகிறது. எப்படித்திருப்பூட்டுதலின் பொழுது மணமகள் மேல் நிற்க மணமகன் கீழ் நின்று (வட்டகைக்கு ஏற்ப சில மாற்றங்கள் இருக்கும்) திருப்பூட்டி குடும்பத்தைக் கணவனுக்கும் மேலாக நின்று நல்வழி செலுத்துவேன் என்று மனைவி உறுதிமொழி எடுப்பதைச் சொல்லாமற் சொல்லுகிறாளோ அதுபோலத்தான் இதுவும்.

உதிரிபாகங்கள் 31+3 ஐயும் உற்றுப்பாருங்கள் அவற்றின் பெயர்களைச் சொல்லிப்பாருங்கள் பொருள் தன்னாலேயே தெரியும்.

மேற்பகுதியில் உள்ள திருமாங்கல்யம், திருமகளே உருவான மனைவியைக் குறிக்கிறது. திருமகள் வருகைபோல் மனைவி வருகையால் பேர் பெற்றவர்கள் உலகில் பலர் உண்டு. அதிலும் நம்மவர்களில் பற்பலர் உண்டு.

கீழ்ப்பகுதியில் உள்ள லெட்சுமி ஏத்தனம் 4 தூண்களாலோ சுவர்களாலோ எழுப்பப் பெற்றிருக்கும். வீட்டைக்குறிக்கிறது வீட்டின் தலைவனான கணவனையும் குறிக்கிறது.

## கழுத்துரு




1,16,17,31 - கடைமணி
2,3,4,6,8,10,12,14,15,18,19,
20,22,23,25,26,28,29,30 - உரு

5,13,21,27 - ஏத்தனம்

24 - லெட்சுமி ஏத்தனம்

7,11 - சரிமணி

9 - திருமாங்கல்யம்

மேற்பகுதியில் உள்ள 2 கடைமணிகளும் கீழ்பகுதியில் உள்ள 2 கடைமணிகளும் ஆக மொத்தம் 4 கடை மணிகளும் 4 திசைகளையும் குறிக்கின்றன. அதாவது கணவன் நாற்புறமும் (நாலாபக்கமும்) சென்று அறவழியில் பொருள் ஈட்ட வேண்டும் என்பதன் பொருள்.

4 ஏத்தனங்களும் உள்ளங்கை பூமியைப் பார்த்திருக்கும் விதத்தில் அமைந்த 4 கைகள் போன்றது. மேல்பகுதியில் உள்ள 2 ஏத்தனங்கள் மனைவியின் 2 கைகள் கீழ் பகுதியில் உள்ள 2 ஏத்தனங்கள் கணவனின் 2 கைகள். இந்த 4 ஏத்தனங்களும் அவர்கள் நடத்தப்போகும் இல்லறத்திற்கு அவர்கள் கை கொடுப்போம் என்று உறுதி கூறுவதன் பொருள் இந்த உறுதிமொழியைத்தான் சமஸ்கிருத மந்திரமும் அதன் இயல்புக்கு ஏற்றவாறு சொல்கிறது.

2 சரிமணிகளும் இருபால் குழந்தைகளைக் குறிப்பிடுகிறது. அதாவது மணியான ஆண், பெண் குழந்தைகளை ஈன்றெடுத்து நற்பெற்றோராகத் திகழ்வோம் என்பதன் பொருள். வம்ச அபிவிருத்திற்கு ஆண்வாரிசு முக்கியம் என்றாலும் சமூக அபிவிருத்திக்கு இருபால் குழந்தைகளும் வேண்டப்பெறுகின்றன.

திருமாங்கல்யத்திற்கு அடுத்த பெருமை பெறுவது உரு. உரு என்றால் உருவம் என்று பொருள். அப்படி என்றால் யாருடைய உருவம்? நம் தந்தை வழி தெய்வத்திரு முன்னோர்களின் உருவம். முன் சொல்லியது போல 21 தலைமுறை முன்னோர்களில் திருமணத்திற்கு மணமகனின் தந்தை வழி அய்யா கலந்து கொண்டோ கலந்து கொள்வதாகப் பாவனை செய்து கொண்டோ திருமணப்பணத்திருப்பேட்டில் அவர்கள் பெயரில் முதலில் மொய்ப்பண வரவு வைத்து, தகப்பனார் திருமணம் செய்து வைத்து வாழ்த்தி வழி நடத்துவதால் இந்த இருவர் நீங்கலாக

மீதி உள்ள 19 முன்னோர்களுக்குத்தான் 19 உரு. அதாவது மணமகன் வழி முன்னோர்களை, முன்னோர் வழியை உருவேற்றி வாழ்வோம் அவர்கள் எங்களோடு இருந்து எங்களை வாழ்த்தி வழிநடத்தட்டும் என்று பொருள்.

நம் வழக்கப்படி பெண்களுக்குப் புகுந்த வீடுதான் பிறந்த வீட்டை விட முக்கியமானது. புகுந்த வீட்டைத்தான் பெருமை பெறச் செய்யவேண்டும் என்ற எண்ணத்தை உருவேற்றுவதற்காகத்தான் மணமகன் வழி முன்னோர் மட்டும் குறிக்கப்பெறுகிறது.

முற்காலத்தில் கழுத்துருவை மணமகன் வீட்டார் செய்திருக்கலாம் பிறகு அதற்குரிய பொன்னை மணமகள் வீட்டிற்கு வழங்கி அவர்களையே இதர நகைகளுடன் சேர்த்து இதையும் செய்யச்சொல்லி இருக்கலாம். (பிறகு வந்த மாற்றத்தால் எல்லாம் பெண் வீட்டாரையே சேர்ந்து விட்டது) இதை மணமகன் வீட்டார் கழுத்துருவுக்குப் பொன் கொடுத்தல் (முகூர்த்தம் வைத்தல்) கழுத்துரு வாங்கப் போகுதல் என்ற நிகழ்ச்சிகள் வாயிலாக அறிந்து 19 உரு என்பது மணமகன் வழி முன்னோர்கள் என்று உறுதி செய்ய முடிகிறது.

31 உதிரிபாகங்களுக்குமாக மேற்கூறிய எல்லாவற்றையும் சேர்த்துச் சொன்னால், மணமகள் மணமகனை நோக்கி, 'தங்கள் 21 தலைமுறைப் பாரம்பரியத்துடன் 21 முன்னோர்களில் 19 பேருக்கு உருவங் கொடுத்து இருவர் உடன் இருக்க திருமகளே உருவான நான் அவர்கள் வாழ்த்துதலுடனும் வழி நடத்துதலுடனும் நாலா புறமும் சென்று அறவழியில் தாங்கள் ஈட்டிவரும் பொருளை வைத்து மணியான ஆண் பெண் குழந்தைகளை ஈன்றெடுத்து, தங்களுடன் தங்களுக்கும் மேலாக நின்று இல்லறம் நடத்த நான் சம்மதிக்கிறேன். தாங்களும் சம்மதிக்கிறீர்கள்' என்று உறுதிசொல்லி மங்கல அணிகலனை ஏற்கிறாள் என்பதாகும்.

முன்னர்க்காலங்களில் நம்மவர்களில் நன்கு வாழ்ந்த பெரியவர் திருப்பூட்டி இருக்கிறார். இது விபரம் இசை குடிமானம் என்ற தலைப்பில் சொல்லப் பெற்றிருக்கிறது.

திருமணத்தன்று 31 உதிரிபாகங்கள் வழியாக மணமகனும் மணமகளுமாக உறுதிமொழி ஏற்பது போல அமைகிறது. அதன் பின்னர் 2 பகுதிகளிலும் சேர்த்துக் கோர்க்கப்பெறும் குச்சி, தும்பு, துவாளை என்ற 3 தனி உதிரிபாகங்கள் கணவனும் மனைவியுமாக உறுதிமொழி ஏற்பதைச் சொல்கின்றன.

குச்சி ஊன்று கோலைப்போன்றது. தும்பு பிடியைப் போன்றது. துவாளை தடியைப் போன்றது. மணமக்களாக இருந்தவர்கள் கணவன் மனைவியான பிறகு இல்லறத்தை ஊன்று கோலாகக் கொண்டு ஒருவரை விட்டு ஒருவர் பிரியாது எதிர்வரும் பிரச்சனைகளை விலக்கி வாழ்வில் வெற்றி பெறுவோம் என்று உறுதி சொல்வதாகும். தனித்தும்பு இந்த 3ன் பதிலியே.

இங்ஙனம் சிறந்து விளங்கும் நம் கழுத்துரு அரக்குக்கழுத்துரு விராகன் எடைக் கழுத்துரு என்பன போன்ற பல நிலைகளைக் கடந்து இன்று Pressing Type நிலையை அடைந்து சிறிய அளவில் இருக்கிறது. இன்று கழுத்துரு இருக்கக் கூடிய அளவில்தான் பழைய காலங்களில் திருவாதிரைப் புதுமைக் (அரைக்கல்யாணம்) கழுத்துரு, இருந்தது என்று பெரியவர்கள் சொல்கிறார்கள். இது எந்த நிலையை அடைந்து எந்த அளவில் இருந்தாலும். இது தாங்கி இருப்பது 21 தலைமுறைப்பாரம்பரியத்தை. இது விதையாவது ஆயிரங்காலத்துப் பயிருக்கு.

## 5. தர்மத்திலும் தர்மம்

முற்காலத்தில் நம்மவர் தொழில்கள் ரெத்தின வியாபாரம், லுங்கி போன்றவற்றை வெளிநாடுகளுக்குப் பாய்மரக்கப்பலில் சென்று கொண்டு விற்றல் மற்றும் லேவாதேவி என்று சொல்லப்பெறும் வட்டித் தொழில் (கொடுக்கல் வாங்கல்) ஆகும். அழுகும் பொருள் வியாபாரம் செய்யாத நம்மவர் தொழிலேயே தலைசிறந்தது லேவாதேவி என்று சொன்னால் அதை யாரும் மறுக்க முடியாது.

மேற்பகுதியில் உள்ள 2 கடைமணிகளும் கீழ்பகுதியில் உள்ள 2 கடைமணிகளும் ஆக மொத்தம் 4 கடை மணிகளும் 4 திசைகளையும் குறிக்கின்றன. அதாவது கணவன் நாற்புறமும் (நாலாபக்கமும்) சென்று அறவழியில் பொருள் ஈட்ட வேண்டும் என்பதன் பொருள்.

கெடிகாரத்தின் சிறிய முள் அசைவது தெளிவாகத் தெரியாது ஆனால் அது அசையும் அது போல வட்டித் தொழிலில் பணம் பெருகியது. தங்க நகைகளில் அசையாச் சொத்துகளில் செய்யும் முதலீடு ஒரு குறிப்பிட்ட Stage க்கு மேல் பெருகுவது இல்லை. பணத்தை மறுமுதலீடு செய்தால் தான் அது பெருகும் என்பது பொருளாதார வல்லுனர்களின் கருத்து. இதை நம் முன்னோர்கள் அன்றே கண்டு தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு சென்று அங்கு உள்ள பொருள் தேவையை அறிந்து லேவாதேவித் தொழிலைச் செய்திருக்கிறார்கள்.

இன்று சிலர் சொல்லலாம். அன்று தங்கம் 1 பவுன் ரூ.25/- க்கும் 1 குழி (12 சதுரடி) இடம் ரூ. 10/- க்கும் விற்றது. இன்று பாருங்கள் என்ன விலை விற்கிறது? என்று உண்மைதான் இந்த விலை ஏற்றம் நாணயத்தின் மதிப்புக் குறைவால் வந்ததே! இந்த ஏற்றத்தை விட ஏற்றம் தருவது லேவாதேவி ஆனால் மக்கள் மத்தியில் நாநயம் இல்லாததால் தடைபெற்று விட்டது. அதன் பலன் முற்றிலும் குறைந்துவிட்டது என்றே சொல்லலாம்.

செட்டிக்குத் தூக்கம் வந்தாலும் வட்டிக்குத் தூக்கம் வராது. துட்டுக்கு எட்டுச்சட்டி வாங்கி சட்டி ஒண்ணு



17

எட்டுத்துட்டுக்கு விற்றாலும் செட்டியின் வட்டிக்குக் கட்டாது. என்பன போன்ற பழமொழிகள் மூலம் நமக்கும் வட்டிக்கும் இருந்த தொடர்பையும் வட்டியின் பெருமையையும் அறிய முடிகிறது.

லேவாதேவித்தொழிலையும் Money Exchange ஐயும் உலகிலேயே நாம் தாம் முதலில் திறம் பெறச் செய்தோம் என்பதை Chettiar Hundi System போன்ற வணிகப் பொருளாதார வரலாறுகள் உலகிற்குச் சொல்லுகின்றன.

பொருள் ஆக்கத்திற்கு உலகப் பொருளாதாரத்திற்கு, ஏன் கொண்டு விற்கச் சென்ற பொழுது உலக ஒருமைப் பாட்டுக்கும், ஆன்மீகத்தை உலகெங்கும் பரப்புவதற்கும் நாம் தொண்டாற்றினோம் அது என்றால் மிகையாகாது.

இந்தத் தொழிலையும் நாம் தர்ம வழியிலே தான் செய்தோம் வட்டி வாங்கி ஆதாயம் பெற்றுத்தானே? தொழில் நடத்தினார்கள் இது எப்படித் தொழில் தர்மம் ஆகும்? என்று ஒரு சாரர் சொல்லலாம். இன்னொரு சாரர் சாடலாம். இந்த மகா சமுத்திரத்தில் எங்கேனும் ஒரு சில தவறுகள் இந்தத் தொழிலில் நடந்திருக்கும் அதைப் பெரிய தவறாக்கி எல்லோருமே அப்படித்தான் என்று பேசுபவர்கள் பலர் இருக்கலாம். அது எல்லாம் இருந்துவிட்டுப் போகட்டும். இந்த லேவாதேவித் தொழிலை தொழில் தர்மத்தோடு செய்தோம் என்று ஏன் சொல்கிறோம் என்றால், நாம் தினமும் நம் வீட்டுக்கு *1* கிலோ அரிசி ரூ. *20/-*க்கு ஒரே கடையில் வாங்குகிறோம். அவர் ரெம்ப நியாயமான லாபம் வைத்து விற்கும் வியாபாரி. அதனால் *1* கிலோவுக்கு *1* ரூபாய் ஆதாயமே பெறுகிறார். அப்படியானால் *1* மாதத்திற்கு *1* கிலோ அரிசிக்கு அவர் திரும்பத் திரும்பப்போடும் முதலீடு ரூ. *19/-* தான் ஆனால் அந்த நியாயஸ்தர் பெறும் லாபம் ரூ. *30/-* அவர் கையில் உள்ள ரூ. *19/-* க்கோ அரிசிக்கோ உத்திரவாதம் உண்டு. ஆனால் மன உளைச்சலைத்தரக்கூடிய கொடுத்த கடனுக்கு உத்திரவாதம் இல்லாத கொடுக்கல் வாங்கல் தொழிலுக்கு இன்றே ரூ. *100/-*க்கு மாதம் *1* க்குக் கிடைப்பது ரூபாய்

இரண்டோ மூன்றோ (அன்றும் இந்த இரண்டுமே இதே வீதத்தில் தான் இருந்திருக்கும்) ஆனால் இது உடல் உழைப்பு இல்லாமல் வந்த வருமானமாம் அபிவிருத்தியைத்தராதாம். இது தான் தொழில் தர்மம் பேசுபவர்களின் வாதம். அவசரத் தேவைகளுக்குச் செட்டியாரை நாடியவர்களின் ஆசீர்வாதம் இதனால்தான் இந்தப்புனிதமான தொழிலை நம் முன்னோர்கள் தொழில் தர்மத்தோடு செய்தார்கள் என்று சொல்கிறோம்.

இப்படியாகத் தொழிலைத்தர்ம வழியில் செய்து பொருள் ஈட்டி, தங்கள் சந்ததியினர் வாழையடி வாழையாக வாழ வேண்டும் என்பதற்காகத் தர்மங்கள் பல செய்தார்கள். தமிழ் வளர்த்தார்கள் எல்லாவற்றிற்கும் மேலாகச் சைவம் போற்றினார்கள்.

இன்னும் சிறப்பாகச் சொல்லப்போனால் தர்ம வட்டியிலே வீடுகள் என்ற பெயரில் பர்மாவையே (பர்மாத்தேக்கு மரங்களை) கொண்டு வந்தார்கள். அள்ள அள்ளக் குறையாத செல்வம் இருந்தாலும் சாப்பிடுவது வட்டியில் தான் என்பது நம் பழக்கம்.

கட்டிடக் கலைபோற்றும் வெள்ளை மாளிகைகள் கடைத்தெருவே வந்து சீர்வரிசையாகும் திருமணங்கள், ஆலை, கல்விச்சாலை, ஆலயம், ஆபரணம், செல்வம், செல்வாக்கு இன்னும் ஏராளம் ஏராளம். இவை எல்லாம் எதனாலே? சிறுவட்டியால் பெரு நகரத்தாராலே! என்பது கண்கூடு.

இத்தகைய நம் நகரத்தார் இல்லங்களில் பெரும்பகுதி இன்று பெருங்காயப் பெட்டி மணப்பது போல இருக்கின்றன. இந்தப் பெட்டிகள் மணம் மட்டும் தரும் பெட்டிகள் இல்லை. இலக்குமி வாசம் செய்யும் இனிய இல்லங்கள் என்பதை நெஞ்சில் உரமாகக் கொண்டும், அலைகடல் ஓடித்திரவியம் கண்ட நம் முன்னோர்கள் தொழிலைத் தர்ம வழியில் செய்து அதில் ஈட்டிய பொருளையும் தர்மம் செய்ததனாலே தான் நாம் இந்த அளவிற்காகவாவது இருக்கிறோம் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டும் ஒன்று கூடி வாழ்வோமாக!

## 6. பேரன் பிறக்கோணும்

நம் ஆயாள்களும் அப்பத்தாள்களும் 'மேலைக்குப் பேரம் பொற்கோணும்' (பேரன் பிறக்கோணும்) என்று சொல்லி மனதார வாழ்த்துவதை நாம் அன்றாடம் கேட்டு வருகிறோம்.

பொருள் தெரிந்தும் தெரியாமலும் அவரவர் மனோ நிலைக்கு ஏற்பவும் இந்தத் தொடரை நம் மூதாட்டிகள் சொல்லி வருகிறார்கள். இதில் எத்தனையோ அறிவியல் உண்மைகள் பொதிந்து கிடக்கின்றன.

இத்தகைய மிகச்சிறந்த விஞ்ஞான தத்துவத்தை உலகில் உள்ள கோடானு கோடி மக்களில் எந்த ஒரு முழுச்சமுதாயம் சொல்லி வருகிறது? என்றால் அது நம் நகரத்தார் சமுதாயம் தான்.

பேத்தி பிறக்கோணும் என்று சொல்லாமல் பேரன் பிறக்கோணும் என்று சொல்வதற்கு சீதன சீர்வரிசை மட்டும் காரணமல்ல. நம் முன்னோர்கள் நமக்கு மகனாகவும் பேரனாகவும் பிறக்க வேண்டும் என்பதும் காரணமல்ல. அவர்கள் எந்நாளும் நம்மவர்கள் உருவிலே வாழ்ந்து கொண்டிருக்க வேண்டும். என்பதற்காகத்தான் அங்ஙனம் சொல்கிறார்கள்.

எப்படி நம் முன்னோர்கள் நம் உருவிலே வாழ்ந்து கொண்டிருப்பார்கள் என்று கேட்கலாம். பின்வருவதை அன்பு கூர்ந்து படித்துப் பார்த்தபிறகு ஆம்! உண்மைதான் என்று தெரிந்து கொள்ளலாம். இது விஞ்ஞானப் பூர்வமான உண்மைதான் (Scientifical Truth) என்பதை அறிவியல் நிபுணர்களும் ஒத்துக்கொள்வார்கள்.

ஒவ்வொரு உயிரினத்திற்கும் உள்ள தனித்தன்மைக்கு குரோமோசோம்கள் (Chromosomes) என்ற மரபுக்கூறுகள் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையில் நிலையாக அமைந்து காரணமாக இருக்கின்றன. மனித இனத்திற்கு இந்த

பொழுது குரோமோசோம்களின் எண்ணிக்கை 46 (22 ஜோடி உடல் குரோமோசோம்கள் 1 ஜோடி பால் குரோமோசோம்கள்)

கருவுருதலின் பொழுது தாயிடமிருந்து வருகிற 22 உடல்குரோமோசோமும் **X** என்ற ஒரு பால் குரோமோசோமும் தந்தையிடமிருந்து வருகிற 22 உடல் குரோமோசோமும் **X** அல்லது **Y** என்ற ஒரு பால் குரோமோசோமும் இணைந்து ஒரு குழந்தை உருவாகிறது. தாயின் **22 + X** குரோமோசோமுடன் தந்தையின் **22 + X** குரோமோசோம் இணைந்தால் பெண்குழந்தையும் தாயின் **22 + X** குரோமோசோமுடன் தந்தையின் **22 + Y** குரோமோசோம் இணைந்தால் ஆண்குழந்தையும் பிறக்கிறது. இந்த இடத்தில்தான் நம் மூதாட்டிகளின் பேரம் பொறக்கோணும் என்ற வாக்கு சிந்திக்க வைக்கிறது.

ஆண்குழந்தை பிறந்துவிட்டாலே நிச்சயமாக அது ஆண் மூதாதையர்களான தந்தை, தந்தை வழிப்பாட்டனார் (அய்யா) முப்பாட்டனார் (பாட்டய்யா) போன்றவர் களிடமிருந்து கடத்தப் பெற்று வருகிற **Y** குரோமோசோமின் பிரதிபலிப்பாகத் தான் இருக்கமுடியும் அதாவது அவர்களின் உயிரணு இன்னொரு உடல் எடுத்துள்ளது என்று பொருள். ஆனால் பெண் குழந்தைக்கு அப்படி அல்ல. உதாரணத்திற்கு லெட்சுமி என்ற ஒரு பெண்குழந்தைக்குத் தாயிடமிருந்து ஒரு **X** குரோமோசோமும் தந்தையிடமிருந்து ஒரு **X** குரோமோசோமும் வருகிறது என்று வைத்துக்கொள்வோம். தாயிடமிருந்து வந்த **X** குரோமோசோம் அந்தத் தாயின் தந்தையிடமிருந்து (ஆயாள் வழி அய்யாவிடமிருந்து) வந்ததாகவோ தாயின் தாயிடமிருந்து (ஆயாளிடமிருந்து) வந்ததாகவோ இருக்கிறது. அந்தப் பெண்குழந்தைக்கு தந்தையிடமிருந்து வருகிற **X** குரோமோ சோம் அந்தத் தந்தையின் தாயிடமிருந்து (அப்பத்தாளிட மிருந்து) வந்ததாக இருக்கிறது. இங்கே ஆழ்ந்து படிக்கிற

X குரோமோசோமின் நிலையற்ற தன்மை புரியும். அதனால்த்தான் பெண்குழந்தைகளிடம் தாய்வழிக் குணங்களும் தந்தை வழிக்குணங்களும் கலந்து இருக்கின்றன. இத்தகைய குணங்கள் கூட அந்தப்பெண் குழந்தையோடு பெரும்பகுதி முடிந்து விடுகிறது.

அடுத்த தலைமுறைக்கு நிச்சயமாகக் கடத்தப்பெறும் என்று சொல்லமுடியாது. ஏனென்றால் லெட்சுமிக்குப் பிறக்கும் பெண் குழந்தைக்கு லெட்சுமி வழங்கும் ஒரு X குரோமோசோம் லெட்சுமியின் ஆயாவுடையதாகவோ ஆயாள்வழி அய்யாவுடையதாகவோ அப்பத்தாவுடைய தாகவோ இருக்கும். (இரண்டொரு முறை படித்துப்பார்த்தால் குழப்பம் இன்றிப்புரியும்) இதன் காரணமாகத்தான் நம் முன்னோர்கள் ஆண்வாரிசு வேண்டும் என்று வலியுறுத்தினார்களோ என்னவோ தெரியவில்லை. அப்படி ஆண் வாரிசு பிறந்துவிட்டாலே எவ்வளவோ செயற்கரிய செய்த நம் அய்யாக்கள் நம்முள்ளே எந்நாளும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகிறது. அதனால்தானோ என்னவோ தந்தை வழி அய்யா, பாட்டய்யா பெயர் வைப்பதைக் கட்டாய வழக்கமாகக் கொண்டு பேரன் என்ற சொல்லுக்குப் பெயருக்கு உரியவன் என்றும் பெயர்த்து எடுக்கப்பெற்றவன் என்றும் பொருள் கண்டிருக்கிறார்கள்.

பெண் குழந்தை வயதுக்கு வந்ததைக் கூட நாம் எப்படி வினவுகிறோம்? பேரன் உண்டா? என்று தானே! பேத்தி உண்டா என்று இல்லையே! ஒரு பெண் கருவுற்றிருக்கும் பொழுது மகர் நோன்புக்குக் கிலுக்கி எடுப்பும் கிலுக்கி குத்துதலும் நடத்துகிறோம். ஆனால் கொப்பி கொட்டுவது வழக்கம் இல்லையே! இந்த நிகழ்ச்சிகளில் எல்லாம் நம்முடைய முற்போக்கான கருத்து மேலோங்கி நிற்கிறது.

சுவீகாரம் செய்து கொள்வதில் கூட குரோமோசோம்

விஞ்ஞானம் இருக்கிறது. எந்த ஊரிலிருந்து எந்த ஊருக்குக் கூட்டினாலும் கூட்டிக் கொள்கிறவரின் மரபுக்கூறான Y குரோமோசோமும் வருகிற பிள்ளையின் மரபுக்கூறான Y குரோமோசோமும் ஏதோ ஒரு காலத்தில் நிச்சயமாகக் கிளைகளாகப் பிரிந்து வந்ததாக இருக்க வேண்டும். இருக்கும் இதுவும் நம் சமுதாயத்தின் தனிப்பெருஞ்சிறப்பு அம்சம் இந்த விஞ்ஞானத் தத்துவத்தை விஞ்ஞானம் இன்று சொல்கிறது. நாமும் படிக்கிறோம். ஆனால் இவை எத்தனையோ ஆண்டாண்டுகளுக்கு முன்பிருந்தே நம் மரபில் இருந்து வருகின்றன.

Sex Linked Character என்ற சொல்லை மருத்துவ உலகில் சொல்லக் கேட்கிறோம். இதன் பொருள் பரம்பரைக் குணங்கள் நிறை குறைகள் தலைமுறை தலைமுறையாகக் கடத்தப்பெறுகின்றன என்பதாகும். இந்த நிகழ்வு கூட ஆண் வாரிசுகளிடையேதான் தொடர்ச்சியாக நடைபெறுகிறது. பெண் வாரிசுகளிடையே தொடர்ச்சியாக நடைபெறுவதில்லை.

இந்தக் கட்டுரையில் ஆண்களை உயர்த்தி எழுதியிருப்பதாக முடிவு செய்துவிடாதீர்கள். நம் குல ஆண்கள் தாம் உயர்ந்து சிறந்து விளங்க வேண்டும் என்று நம் பெண்களே பேரம் பொறக்கோணும் என்பன போன்ற தொடர்களால் வாழ்த்தி விரும்பி வாழ்ந்து வருகிறார்கள்.

ஆண்குழந்தை இல்லை என்று சொல்லி இத்தகைய தயாள குணம் கொண்ட நம் பெண்மணிகளை வைத்துவிட்டு ஒரு காலத்தில் ஆண்கள் மறுமணம் செய்து கொண்டார்கள். ஆண்குழந்தை பிறக்காததற்குப் பெண்களா காரணம்? இல்லை. இயற்கையிலேயே அர்த்தநாரீசுவரர் போன்ற மரபுக்கூறுகளைக் கொண்ட ஆண்கள் தாம் முழுக்க முழுக்கக் காரணம்.

சீர்வளரும் நம் பெண்மணிகள் சிறந்தோங்கி வாழ்த்தளிக்கும் நம் நகரத்தார் குலம் எந்நாளும் வளர்ந்தோங்க நம் முன்னோர்களையே போற்றி வணங்குவோமாக!

20

## 7. வரவு பற்று

சைவமும் தமிழும் இருகண்களெனப் போற்றும் நாம் வரவு செலவுக் கணக்கு எழுதுவதை நம் முதற்கடமையாகக் கொண்டிருக்கிறோம்.

கணக்குப்பார்க்காத வரவு செலவு, 'கழுதை மேய்ந்தது போல' என்பார்கள். எதையுமே கணக்குப் பார்த்துச் செய்வது நம் பரம்பரை வழக்கமாகையால் 'செட்டியார் கணக்குத் தப்பாது' என்று பிறர் நம்மைப் பாராட்டுவதிலிருந்து நம் கணக்கு எழுதும் திறனை உலகம் எப்படி எடை போடுகிறது என்பதை அறிய முடிகிறது.

கருவிகள் போடும் கணக்குகளை நம் முன்னோர்கள் வாயாலேயே சொல்லுவார்களாம். இன்னும் சிலர் சொல்கின்றனர். மாகாணி, வீசம், அரைக்கால், கால், அரை, முக்கால் வாய்பாடுகளைக் கூட்டல் வாய்பாடாகவும் பெருக்கல் வாய்பாடாகவும் கடகடவென ஒப்பிப்பார் களாம். அணா பைசா விடுதல் இன்றி எத்தனை வருடங் களுக்கு வேண்டுமானாலும் வட்டிச்சிட்டை போடுவார் களாம்.

இன்று நம் பிள்ளைகளும் நாமும் அவர்களின் வழித்தோன்றல்களாதலால் யாராவது கணிதப்பாடத்தில் தோல்வி காண்போமா? காணவே மாட்டோம். கணக்குப் போடுவது தேன்குழல் சாப்பிடுவது போன்று நமக்குப் பழகிவிடுகிறது. பழகாவிடில் இத்தனை வங்கிகளை நிறுவி திறம்பட நிர்வகித்திருக்க முடியுமா! ஆயிரமாயிரம் கல்வி நிலையங்களை தொழிற்சாலைகளை உருவாக்கியிருக்க முடியுமா?

நம்முடைய வரவு செலவுக்கணக்கு, விபரங்களைத் தருவதில் கண்ணாடி போல முன்னோடி நிற்கும். வரவு செலவுக்கணக்கு நோட்டைப்பாருங்கள் வரவு பற்று என்றுதான் இருக்கும் இந்த மாதிரிக் கலம் போட்டதைத்தான்

நம் பெரியவர்கள் வாங்கி வரச் சொல்லுவார்கள் பற்று வரவு வேண்டாம் என்பார்கள். ஏன் இரண்டும் ஒன்று தானே! என்று கேட்டால் தம்பீ வரவு வந்தால் தான் பற்று வைக்கமுடியும் என்று பதில் சொல்வார்கள். வரவு பற்று என்று பிரிண்ட் செய்யப்பெறாத நோட்டாக இருந்தாலும் வரவு பற்று என்றே கையாள்வது நம் வழக்கம். இங்கே பாருங்கள் நம் ஆக்கப்பூர்வமான எண்ணம் சுடர்விடுவதை வருமானம் வரவேண்டும். பிறகுதான் செலவு செய்ய வேண்டும். பற்று எழுதவேண்டும். இதோடு அந்த எண்ணத்தை விட்டு விடுகிறோமா இல்லை. குறிப்பில், முதலில் 5 அல்லது 7 சுவாமிகள் பெயரில் 0.25 வரவு வைத்து அதன்பிறகு ஆதாய வரவு 1.25 என்றும் வரவு வைக்கிறோம். இது இன்று நேற்றுத் தொடர்ந்த பழக்கம் இல்லை. எவ்வளவோ நூற்றாண்டுகளாகப் பின்பற்றிவரும் பாரம்பரியம்.

அடுத்து வரவு பற்று நடவடிக்கைகளைக் குறிப்பில் பதிந்து வருகிறோம். அன்றாடம் இருப்புக் கட்டுகிறோம். இருப்பு எழுதியதை வைத்தே பெட்டியில் எவ்வளவு இருக்கிறது என்பதைக் கண்டு கொள்ளலாம். ஆனால் கல்வித் திட்டத்தில் உள்ள **Accountancy** என்ற கணக்குப்பதிவியல் முறையில் ரொக்கக் கணக்கு என்ற ஒரு தனிக்கணக்கு (இனவழி போல) **Maintain** செய்வார்கள். குறிப்பில் உள்ள ரொக்க நடவடிக்கைகளை ரொக்கக் கணக்குப்பகுதியில் பதிந்தால்தான் பெட்டியில் உள்ள இருப்பு சரி அல்லது தவறு என்று முடிவு செய்யமுடியும் இந்த ரொக்கக்கணக்கு நடவடிக்கைகளை Accountancy பயிலும் மாணவர்கள் 'உள்வருவதைப்பற்றுவை வெளிச்செல்வதை வரவுவை' என்று மனனம் செய்வார்கள். இதுபோல மனனம் செய்யவேண்டியவை இன்னும் இருக்கின்றன. ஆனால் ஆதி காலம் முதல் நாம் பின்பற்றி வருகிற (நடைமுறையிலும்

இதுதான் உள்ளது) முறையில் மனனம் செய்ய வேண்டியது எதுவும் இல்லை. கணக்குப்பதிவியல் முறையில் இதுபோல் இன்னும் சில நடவடிக்கைகளும் சற்று கடினமாக இருக்கும். இது Accountancy முறையின் இயல்பு. நாம் சொல்ல விரும்புவது நாம் பின்பற்றும் முறையின் எளிமையைத்தான் Accountancy முறையைக் குறைகூறுவதற்காக அன்று அது எப்படி என்பதை பின்வரும் ஒரு வரவு பற்று நடவடிக்கை தெளிவாக்கும்.

**நடைமுறையில் உள்ள நாம் பின்பற்றும் முறைப்படி :**

**குறிப்பு :**

| தேதி | பே.ப. எண். | விபரம் | வரவு ரூ. பை. | பற்று ரூ. பை |
|---|---|---|---|---|
| *10.1.05* | | இராமு வரவு ரூ. | **1500.00** | |
| *12.2.05* | | சோமு பற்று ரூ. | | **1000.00** |
| | | ரூ. | **1500.00** | **1000.00** |
| | | இருப்பு ரூ. | **500.00** | |

**பேரேடு :**

**இராமு க/கு**

| தேதி | கு.ப.எண் | விபரம் | வரவு | பற்று |
|---|---|---|---|---|
| *10.1.05* | | வரவு ரூ. | *1500.00* | |

(அடுத்த மாதமும் இப்படியே தொடரும்)

**சோமு க/கு**

| தேதி | கு.ப.எண் | விபரம் | வரவு | பற்று |
|---|---|---|---|---|
| *12.2.05* | | பற்று ரூ. | | *1000.00* |

(அடுத்த மாதமும் இப்படியே தொடரும்)

**Accountancy முறைப்படி**

**குறிப்பு**

| தேதி | பே.ப.எண் | விபரம் | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| *10.1.05* | | இராமு வரவு | | *1500.00* |
| | | ரொக்கக் கணக்கு பற்று | *1500.00* | |
| *12.1.05* | | சோமு பற்று | *1000.00* | |
| | | ரொக்க க/கு வரவு | | *1000.00* |
| | | | **2500.00** | **2500.00** |

**ரொக்கக்கணக்கு**

பற்று வரவு

| தேதி | விபரம் | கு.ப.எண். | தொகை | தேதி | விபரம் | கு.ப.எண். | தொகை |
|---|---|---|---|---|---|---|---|
| *10.1.05* | பற்று | | *1500.00* | *12.1.05* | வரவு | | *1000.00* |
| *28.2.04* | | | | | இருப்பு கீ.இ | | *500.00* |
| | | | **1500.00** | | | | **1500.00** |
| *1.3.05* | இருப்பு கீ.கொ. | | *500.00* | | | | |

**இராமு க/கு**

பற்று வரவு

| தேதி | விபரம் | கு.ப.எண். | தொகை | தேதி | விபரம் | கு.ப.எண். | தொகை |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | *10.1.05* | வரவு | | *1500.00* |
| *28.2.04* | இரு. கீ.இ | | *1500.00* | | | | |
| | | | **1500.00** | | | | **1500.00** |
| | | | | *1.3.05* | கீ.கொ. | | *1500.00* |

| பற்று | | சோமு க/கு | | | | | வரவு |
|---|---|---|---|---|---|---|---|
| தேதி | விபரம் | கு.ப.எண். | தொகை | தேதி | விபரம் | கு.ப.எண். | தொகை |
| 12.2.05 | பற்று | | 1000.00 | | | | |
| | | | | 28.2.05 | கீ.இ. | | 1000.00 |
| | | | **1000.00** | | | | **1000.00** |
| 1.3.05 | கீ.கொ. | | 1000.00 | | | | |

கீ.இ. கீழ் இறக்கப்படுகிறது.

கீ.கொ. கீழ் கொண்டுவரப்பட்டது.

மேற்சொல்லியிருக்கிற பதிவுகளிலிருந்து நாம் பின்பற்றும் முறையின் எளிமையும் வேலைப்பளு இன்மையும் மனனம் செய்யவேண்டிய அவசியமின்மையும் தெரியும்.

இருப்பு என்பது ரொக்க இருப்பையோ பொருள் இருப்பையோ தான் குறிக்கும் ஆனால் கணக்குப் பதிவியலில் கணக்கு முடிவை இருப்பாய்வு என்று சொல்கிறார்கள். கணக்கு இருப்பு என்பது நம் வழக்கம் அன்று. கணக்கு முடிவு என்பது பொருத்தம் ஆனால் மங்கலச் சொல் அன்று அதனால் தான் நாம் பின்பற்றும் முறையில் இதை ஐந்தொகை என்கிறோம். இந்த ஐந்தொகை என்பது மூலதனம், லாபம் / நட்டம், நாம் பெற்ற கடன், நாம் கொடுத்த கடன், நமது முதலீடு (சொத்து) என 5 விதமான தொகைகளைக் குறிக்கிறது எந்த இருப்பாய்வானாலும் இந்த 5 ஐ மையமாகக் கொண்டே அமையும்.

நகரத்தார்களின் பைசாத் துள்ளியமான கணக்கில் அசந்த (அதிர்ந்த) Incomtax அதிகாரிகள் எத்தனை பேர்? அறநிலையத்துறை ஆச்சரியம் அடைந்த நம் கோவில்கள் எத்தனை? நம் வரவு பற்றுக் கணக்கின் மகிமைதான் என்ன? அளவிட முடியுமா?

வரலாற்று ஏடுகளைப் புரட்டிப்பார்க்கிற பொழுது பர்மாவிலிருந்து வரவேண்டிய வரவு வந்திருந்தால் கம்பன் வீட்டுக்கட்டித்துறையும் கவிபாடும் என்பது போல நம் வீட்டுக் கேணி அடிகளும் தங்க வாளி கண்டிருக்கும். உண்மைதான் நம் கேணி வாளி தங்க வாளியாக இருந்திருக்கும்.

## 8. நாம் எங்கே செல்கிறோம்? இனி, நமக்கு என்ன பெயர்?

சந்திரகுலகோத்திர வைசியர் என்பவர் முன்னொரு காலத்தில் நாகநாட்டில் சாந்தியாபுரி எனும் நகரில் சைவ நெறியில் மரகதவிநாயகர் வழிபாடும் சதாசிவ பீடத்தில் குரு உபதேசமும் பெற்று இரத்தின வியாபாரம் செய்து புகழ் பெற்று விளங்கினார்கள்.

பின்னர் அந்நாட்டு மன்னன் கொடுத்த துயரத்தால் அவர்கள் எல்லோரும் தொண்டை நாட்டில் காஞ்சிபுரம் வந்து அங்கும் சைவ நெறியில் மரகத விநாயகர் வழிபாடும் அருணகிரி சங்கராச்சாரியாரிடத்தில் குரு உபதேசமும் பெற்று இரத்தின வியாபாரம் செய்து இரத்தினதன வைசியர் என்ற பெயரோடு சகல மரியாதையுடன் வாழ்ந்து வந்தார்கள்.

பின்பு தொண்டை நாட்டு மன்னன் பிரதாபராகன் கொடுத்த துயரத்தால் அவர்கள் அனைவரும் சோழநாடு வந்தார்கள். அப்பொழுது அங்கு ஆண்டு வந்த மனுநீதிச்சோழன் அவர்களின் சிறப்பு அறிந்து காவிரிப்பூம் பட்டினத்தில் வடக்குத் தெருவில் பல வணிகர்கள் இருப்பதால் அது நீங்கலாக மற்ற 3 தெருவிலும் குடி இருக்கச் சொல்லி மாளிகைகளில் தங்கக் கலசம் வைத்துக் கொள்ளவும் சிங்கக் கொடியும் கொடுத்து, தங்கள் பரம்பரையினருக்கு மகுடம் சூட்டும் பெரும்பதவியை வழங்கி சிதம்பரம் ஈசான்ய சிவாச்சாரியாரிடத்தில் குருஉபதேசம் பெற்றுக் கொள்ள அனுமதி வழங்கினான். இவர்களும் சைவ நெறி வழுவாது இரத்தின வியாபாரத்தையே இங்கும் செய்து இரத்தின தன மகுட வைசியர் என்ற பெயரோடு வாழ்ந்து வந்தனர்.

பின்னர் வந்த பூவந்திச் சோழன் இவர்களின் பெண்களை அநீதியாகச் சிறை வைத்ததால் அந்த எட்டாயிரம் குடும்பத்தாரும் தங்கள் ஆண்பிள்ளைகளை மட்டும் குரு பீடத்தில் (ஆத்துமநாத சாஸ்திரியிடத்தில்)

தங்கள் பொன்,பொருள்களோடு ஒப்படைத்துவிட்டு அனைத் பெண்கள் உட்பட தற்கொலை செய்து கொண்டு விட்டார்கள். தன் தல்லாத காலத்தில் பூவந்திச் சோழன் தான் செய்த தவறுக்கு வருந்தி என் மகன் இராஜபூசன சோழனுக்குப் பரம்பரை வழக்கப்படி மகுடம் சூட்டுங்கள் என்று குரு பீடத்தில் தங்கி இருந்த மேற்குத் தெரு ஆறு வழியில் 600 பிள்ளைகளையும் தெற்குத் தெரு நான்கு வழியில் 400 பிள்ளைகளையும் கிழக்குத்தெரு ஏழு வழியில் 502 பிள்ளைகளையும் கேட்க, அவர்களோ தாங்கள் செய்த அநீதியால் நாங்கள் 1502 ஆண்பிள்ளைகளைத் தவிர எங்கள் ஆண் முன்னோர்களும் பெண்கள் அனைவரும் அழிந்து நாங்கள் திருமணம் ஆகாமல் செட்டிப்பிள்ளைகளாக இருக்கிறோம். இப்படி இருக்கும் பொழுது நாங்கள் எப்படி மகுடஞ்சூட்டுவது என்று வினவ அரசன் அரசவையைக் கூட்டி ஆலோசித்து, தரும சாஸ்திரப்படி, வைசியர்கள் வேளாளகுலப் பெண்களை மணக்கலாம் என்று சொல்ல, அதன்படி மேற்குத் தெருப் பிள்ளைகள் கார்காத்த வேளாளர் பெண்களை மணந்து, பெண்களுக்குக் குருவாக திருவாரூர் திருநாவுக்கரசு குருக்களையும் தெற்குத் தெருப் பிள்ளைகள் காணிய வேளாளர் பெண்களை மணந்து பெண்களுக்குக் குருவாக கும்பகோணம் சிவஞான குருக்களையும் கிழக்குத்தெரு ஏழுவழிப் பிள்ளைகள் (நம் முன்னோர்கள்) சோழிய வேளாளர் பெண்களை மணந்து பெண்களுக்குக் குருவாக ஸ்ரீவாஞ்சியம் நிரம்ப வழகிய குருக்களையும் ஏற்றுக்கொண்டு வேளாளர் குலத்தில் 1 முறை தான் பெண் எடுப்பது என்றும் மாமச்சடங்கு உள்ளிட்ட எந்தத் தொடர்பும் கிடையாது என்றும் பெண்களுக்கு வேலை செய்ய வெள்ளாட்டிகள் வைக்க வேண்டும் என்ற கட்டுப்பாடுடன் இரத்தின தன மகுட பூபால (வேளாளப் பெண்களை மணந்ததால்) வைசியர் என்ற பெயருடன் சைவ நெறியில் மரகத விநாயகர் வழிபாட்டோடு வாழ்ந்து வந்தனர்.

அப்பொழுது, சவுந்திரபாண்டியன், ராஜபூஷண சோழனை நாடி, தங்கள் பாண்டி நாட்டுக்கு நற்குடிகள் வேண்டும் எனக் கேட்க, சோழன் 3 தெரு வைசியர்களையும் அழைத்து உங்களில் சிலர் பாண்டிநாடு செல்லுங்கள் என்று சொல்ல அவர்களோ, நாங்கள் சென்றால் 3 தெருவாரும் சேர்ந்தே செல்வோம் என்று சொல்ல இரு மன்னர்களும் ஒப்புக் கொண்டனர். பாண்டி மன்னன் கடலுக்கு மேற்கு, வைகைக்கு வடக்கு பிரான்மலைக்குக் கிழக்கு வெள்ளாற்றிற்கு தெற்காகிய வேளாளர் பூமியில் சேர்க்கையாகக் குடி இருக்க இடங்களும் கொடுத்து, அரியூர் நகரமும் பிரான்மலைக் கோவிலும் சுந்தரபட்டணமும் அவ்வூர்க் கோவிலும் இளையாற்றங்குடி நகரமும் அவ்வூர்க் கோவிலும், கூட்டி வந்த பெண்களுக்கு மடலாயமும் ஆண்களுக்குக் குருவாகப் பாண்டி நாட்டு ஆச்சாரியார்களை நியமித்தும் சகல மரியாதையோடு நடத்தினான்.

சோழநாட்டில் 3 தெருவில் 3 வேறுபாடான வேளாளப் பெண்களை மணந்த இவர்கள் பாண்டி நாடு வந்ததும் தங்களுக்குள் ஒற்றுமை குறைந்து மேற்குத் தெருவாற் அரியூர் நகரத்தையும் பிரான்மலைக் கோவிலையும் தெற்கு தெருவார் சுந்தரபட்டணத்தையும் அவ்வூர்க் கோவிலையும் கிழக்குத் தெருவார் இளையாற்றக்குடி நகரத்தையும் அவ்வூர்க் கோவிலையும் பிரித்துக் கொண்டு சைவ நெறியில் மரகத விநாயகர் வழிபாட்டோடு வாழ்ந்து வந்தனர். இந்த 3ல் ஏழு வழியினர் வாழ்ந்த இளையாற்றக்குடி நகரம் நாட்டுக்குள் கோட்டை போல் நடு மண்டலமாதலால் இளையாற்றக்குடி நகரத்தாராகிய ஏழுவழி யாருக்கு மட்டும் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்ற பெயர் வந்தது அரியூரார் அங்கு ஏற்பட்ட கலகத்தால் கேரளா சென்று அங்கு கோட்டாற்றங்கரையில் குடி அமர்ந்து மரகத விநாயகருக்குக் கோவில் கட்டி வாழ்ந்து வருகிறார்கள். இந்த ஏழு வழியினரில் ஒற்றுமைக் குறைவால் ஆறுவழியினர் ஆறு கூட்டமாகவும் மீதி உள்ள ஒரு வழியில்

சிலர் தவிர மீதி உள்ளவர்கள் இரண்டு கூட்டமாகவும் பிரிந்து ஆக மொத்தம் 9 கூட்டமாகி, தனித் தனிக்கோவில்கள் வேண்டுமென பாண்டி மன்னனைக் கேட்க, ஒரு கூட்டத்தாருக்கு இளையாற்றக்குடிக் கோவிலும் அதில் பிரிந்த இரண்டு கூட்டத்தாருக்கு இரணியூர்க்கோவிலும் பிள்ளையார் பட்டிக்கோவிலும் இதர ஆறுகூட்டத்தாருக்கு ஆறு கோவிலும் வழங்கி அவைகளைத் தாங்களே முழுமையாகப் பரிபாலித்து வரும் உரிமையை வழங்கினான் ஒன்பது கோவில் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்ற பெயருடன் (சிகையின்றி) சிறந்து விளங்கியவர்கள் பிறகு தங்களுக்குள் உட்பிரிவுகளை ஏற்படுத்திக் கொண்டனர்.

ஒரு சமயம் 5 வயது நகரத்தார் சிறுமியை காருண்ய பாண்டியன் அரண்மனைக்குக் கூட்டிச் சென்றதால் அவளை மீட்டி வந்து சாதி முறைப்படி அவளை உயிர் வாங்கி 1 தலைக்கு எட்டுத் தலை கொடுக்கச் சம்மதித்து, மன்னன் மறுத்து இவர்கள் மனம் நொந்து அங்கிருந்து கிளம்பி மாற்றூர் முதலிய ஊர்களில் குடி அமர்ந்து படிப்படியாக 96 ஊர்களை அமைத்துக் கொண்டு 96 ஊர் 9 கோவில் நாட்டுக்கோட்டை நகரத்தார் என்ற பெயருடன் முன்பு போலவே சிவ நெறியில் சிகையின்றி குருபீட உபதேசம் பெற்று பின்வரும் கட்டுப்பாடுகளான கோவில் மடம் இவைகளை தங்கள் பார்வையிலேயே வைத்துக் கொள்ள வேண்டும், ஆண்களும் பெண்களும் நம்குரு பீடங்களில் மட்டுமே குரு உபதேசம் பெற வேண்டும், திருமணம் சுவீகாரம் கோவில் பிரிவு பார்த்துச் செய்யவேண்டும், திருமணத்தில் மாப்பிள்ளை தொட்டுக் கொடுக்க நம்மவர்களில் ஒரு பெரியவர் திருப்பூட்ட வேண்டும், இரத்தினம் தங்கம் பலசரக்கு வியாபாரம் செய்ய வேண்டும். ஜீவ வதை வியாபாரம் கூடாது. தரும வட்டி வாங்க வேண்டும். அழுகும் பொருள் வியாபாரம் கூடாது. குத்தகைக்கு எடுப்பது கூடாது. நாட்டாமை செய்யக்கூடாது. திருட்டு வியாபாரம் கூடாது. பிறர் மனைவியை நாடக்கூடாது.

நமது எல்லைக்குள்ளேயே (96 ஊர்களுக்குள்ளேயே) குடும்பத்தோடு குடி இருக்க வேண்டும். பெண்கள் மாற்று தேசம் போகக்கூடாது நகரக்கோவிலில் பாக்கு, வைத்து, கோவில் மாலை, விபூதிப் பிரசாதம் வந்து தான் திருமணம் நடத்த வேண்டும். இரணியூர் கோவிலாரும் பிள்ளையார்பட்டிக் கோவிலாரும் திருமணம் செய்து கொள்ளக்கூடாது என்பன வற்றுடன் வாழ்ந்து வரலானார்கள் என்று பூங்கொன்றை வேலங்குடிச் சாசனத்திற்கு ஏற்ப துளாவூர் மடத்தில் இருந்த புத்தகத்தின் அடிப்படையில் தேவகோட்டை வீர. லெ. சிந்நயச் செட்டியார் ஆய்வின் அடிப்படையில் அமைந்த 'நாட்டுக்கோட்டை நகரத்தார் சரித்திரம்' போன்ற பல வரலாற்று நூல்கள் நம்மவர் வரலாற்றை விளக்குகின்றன.

இந்த வரலாற்றைப் பார்க்கிற பொழுது காலத்தின் கட்டாயம் கருதி, மன்னர்கள் கொடுத்த துயரத்தால் தேசங்கள் மாறி வந்திருக்கிறார்கள். தங்களுக்குள் ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளால் பிரிவினைகளும் கோவில்களும், உட்பிரிவுகளும், நமது 96 ஊர்களும் தோன்றி உள்ளன. அதுபோல இன்று காலத்தின் கட்டாயம் கருதி நம்மவர் பொருளீட்ட 96 (இன்று 74 ஊர்கள் ) ஊர்தாண்டி மாநிலம் மாறி, நாடு தாண்டி ஏன் கண்டமே தாண்டி வாழ்கின்றோம். இது தவிர்க்க முடியாதது. வந்த இடங்களில் பெரும்பாலானோர் குடும்பத்துடனேயே இருக்கின்றோம். பாதிப்பேருக்கு மேல் வீடுகட்டி நிரந்தரக்குடிகளாக ஆகி இருக்கிறோம் அப்படி ஆனால் சாதி நியாங்கள் மீறப்பெற்று விட்டதா? இல்லை. காலம் வாழ்க்கையை மாற்றி இருக்கிறது. நாம் என்ன செய்ய முடியும். சாதி நியாயம் ஏற்பட்ட காலத்திற்கு அது ஏற்புடையது. இன்று இதுதான் ஏற்புடையாது. வரலாற்றைப் பார்க்கிற பொழுது மரகத விநாயகர் வழிபாடு என்பது தொடர்ந்து வந்து கொண்டே இருக்கும் நிகழ்ச்சியாகத் தெரிகிறது. இந்த மரகதவிநாயகர்

இருக்கலாம். இது வரவேற்கத்தக்க மாற்றம்தானே! இதுபோல வரவேற்கத்தக்க மாற்றங்களும் விரும்பத்தகாத மாற்றங்களும் வருவது தானே மாற்றம். அப்படியிருக்கும் பொழுது மாற்றம் நாம் ஏற்றுக் கொள்ள வேண்டியதே!

அன்று பெண்கள் கப்பல் ஏறக்கூடாது. என்றார்கள். கப்பல் ஏறினால்தானே வெளிதேசம் சென்று தங்கி குடும்பம் இடம் பெயர்ந்து விடும் என்று எண்ணினார்கள். ஆனால் இன்று பெண்கள் கப்பல் ஏறாமலேயே வெளியூர் சென்று தங்கி விடுவதை அன்று அவர்கள் அறிந்திலர். குடும்பத்துடன் வட்டகைக்குள்ளேயே இருந்தால்தான் நாம் எல்லோரும் சேர்க்கையாக இருக்க முடியும் என்பது அவர்களின் விருப்பம் அதுபோலத்தான் அவர்கள் ஆதிமுதல் குடிபெயர்ந்து வந்துள்ளார்கள். ஆனால் இன்று மக்கள் தொகை பெருகி விட்டது. நமக்கு இருந்த மரியாதைகள் குன்றிவிட்டன. நாம் செய்த தொழில்களில் இன்று பலரும் நுழைந்து விட்டனர். நாம் பிறர்மீது வைக்கும் நம்பிக்கையே நம்முடைய பலவீனம் ஆகிவிட்டது. அதனால் நாம் பொருளீட்ட பல துறைகளில் பல ஊர்களில் வாழ்கிறோம். அப்படி இருக்கும் பொழுது நாம் சேர்க்கையை எப்படி எதிர்பார்ப்பது? போட்டிகளை எதிர்கொள்வதே பெரிதாக இருக்கும் பொழுது சேர்க்கை சாத்தியமாவது சிரமமே!

இந்தப் பிரிவுக்கு யாரும் காரணமல்ல. யாராலும் தடுக்க முடியாதது. தற்சமயம் இது வீடு என்ற ஒன்றால் பெரிதாகாமல் இருக்கிறது. வீடுகளும் பங்குதாரர் சண்டை பழுது பெறுதல், பழுது பார்க்க இயலாமை பழுதை யார் இருந்து சரி செய்வது. இதற்குச் செலவு செய்வது வீண் போன்ற பல காரணங்களால் கேட்பாரற்று வருகின்றன. வீடுகள் முற்றிலும் பழுதாகிவிட்டால் எப்பொழுதாவது விசேசங்களுக்கு வருபவர்களும் இன்னும் வருகையைக் குறைத்துக் கொள்வர் அப்படி ஆனால் இனி நல்லவை கெட்டவை எங்கு நடைபெறும்? இருக்கிற இடத்தில்தான்

இருக்கிற இடத்தில் இறந்தால் முன்பெல்லாம் தூக்கி வந்தனர் பிறகு முடித்துவிட்டு இங்கு வந்து நிகழ்ச்சி நடத்தினர். இப்பொழுது எல்லாம் அங்கேயே முடித்து ஊருக்கு ஒரு நாள் வந்து தகவல் சொல்வது போல் ஆகிவிட்டது. வீடுகளின் நிலைமை மோசமாகி விட்டால் இனி அதுவும் சொந்த ஊரில் இல்லாமற் போய்விடலாம்.

ஊரில் நடக்கும் அசுப நிகழ்ச்சி 16 நாள், 7 நாள் 5 நாள் 3 நாள் ஆகிவிட்டது. 1 நாளில் முடிக்க சில நிகழ்ச்சிகள் இடிக்கின்றன. பொருட் செலவு ஒரு புறம் இருக்க, நடக்கின்ற நிகழ்ச்சிக்கு யார் இருப்பது அதைவிட, யார் இருந்து நிகழ்ச்சியை நடத்துவது? இதே போலத்தான் திருமணமும் 7 நாள் 5நாள் 3 நாள் இப்பொழுது 1 நாள் திருமணத்திலும் காலைப் பலகாரத்தோடு அதிகம் போனால் மதியச்சாப்பாட்டோடு சொல்லிக் கொள்கிறோம். இதில் எங்கே ஆச்சியைப் பார்ப்பது, அயித்தானோடு பேசுவது? அண்ணனைப் போரு கேட்பது? பெரியப்பச்சியை நலம் விசாரிப்பது இதற்கிடையில் 7 போன் 11.30-க்குப் புறப்பட்டால் 3.30க்கு ஊருக்குப் போய்விடலாம் என்ற சிந்தனை வேறு. இது போலத்தான் படைப்பு, குல தெய்வ வழிபாடு போன்ற நிகழ்ச்சிகளும் நடக்கின்றன. சரிதான் உலகம் துரத்துகிறது. நாமும் ஓடித்தான் ஆகவேண்டும். ஓடும்பொழுது நம் பாரம்பரியம் கெடாமல் ஓடுவோம் பெரியோர்களும் சான்றோர்களும் நமக்கு வழிகாட்ட வேண்டும் நாமும் கேட்டுக் கொள்ள வேண்டும். யாரை யார் குறை சொல்வது? எல்லோரும் நிறையுடையவர்களே எல்லோரும் குறை யுடையவர்களே!

இந்த நிலையில் பங்காளிகள் உறவினர் உறவு, சம்பிரதாயம், சடங்கு, அவர்களின் அவசியம் குறைந்து விட்டதில் வியப்பில்லை.

நம் சிறிய ஊர்களில் இருப்பவர்கள் அங்கு ஒன்றும் இங்கு ஒன்றுமாக (வீடு வசதி இருப்பவர்கள் கூட) இப்பொழுது போக்குவரத்து வசதிக்காகவும் சாமான்கள் வாங்கிச் சேர்ப்பதற்கு வசதியாகவும் பக்கத்துப் பெரிய

ஊருக்கு வந்து திருமணம் செய்கிறார்கள். இனி வீடு வசதி போதாதவர்கள் ஊருக்குப் போயோ, பக்கத்துப் பெரிய ஊருக்குப் போயோ மண்டபம் பிடிப்பதற்கு இருக்கிற ஊரிலேயே மண்டபம் பிடித்துச் செய்வோம் என்பர். ஒரு காலத்தில் சொந்த ஊரில் மண்டபம் பிடித்துச் செய்தால் இழிவு என்ற நிலை இருந்தது. ஆனால் இன்று மண்டபத்தில் செய்வது சகஜம். நாளை மண்டபத்தில் செய்தால் தான் கௌவரம். இப்படியாக மண்டபத்தின் சௌகரியத்தை நாடி வீடு தோது இருப்பவர்கள் கூட ஊருக்குச் சென்று யார் இழுபடுவது. அவர்கள் செய்தார்களே இவர்கள் செய்தார்களே! நாமும் இருக்கிற இந்த ஊரிலேயே செய்வோம் என்று ஆரம்பித்து 1.10 100 என்று பெருகி விடும். இன்னும் 30,40 வருடங்களில் நல்லது கெட்டது எல்லாவற்றையும் இருக்கிற ஊரிலேயே செய்து விடுவோம் ஊருக்கு வந்தால் சண்டை, வீடு பராமரிப்பு இல்லாததால் அதன் நிலைமை கேள்விக்குறி. அப்பொழுது வெளியூர் சென்று கலந்து கொண்டாலும் ஆத்மார்த்தமான முழு ஈடுபாடான நிலை இருக்குமா? என்பது சந்தேகமே! இப்பொழுதே இல்லையே!

இப்படி ஒரு நிலை ஏற்பட்டால் பழனியில் இளையாற்றக் குடிக்கோவில் ஒக்கூர்ப்பிரிவு சென்னை திருவெற்றியூரில் மாற்றூர்க்கோவில் அரும்பாக்கூர்ப்பிரிவு என்றும் உருவானாலும் ஆச்சரியமில்லை இதுவரை ஆச்சி எந்த ஊரில் பிறந்தவர்கள் என்று கேட்டோம். இனி செட்டியார் எந்த ஊரில் பிறந்தவர்கள் என்றும் கேட்க வேண்டி வரும் போல் தெரிகிறது. அப்பச்சி ஒரு ஊர், அண்ணன் ஒரு ஊர், தம்பி ஒரு ஊர், அவர்கள் பிள்ளைகள் அங்கிருந்து வேறு ஊர் சென்றுவிட்டால், பிரிந்து விட்டால் நம் சமூகத்தினரின் இணைப்பு? நம்மவர் அல்லாத வேறு பல சமூகத்தினர் வேறு வேறு இடங்களில் வாழ்கிற பொழுது அவர்களின் வாழ்க்கை முறை முற்றிலும் வேறுபாடுடன் இருக்கிறது. ஆனால் நம்சமூகத்தினரின் பழக்க வழக்கங்கள் எங்கிருந்தாலும், பிறப்பு முதல் இறப்பு வரை ஒரே மாதிரியாக இருக்கின்றன. இதற்குக்

காரணம் நம்முடைய சேர்க்கையான வாழ்க்கை முறை தான். இந்தச் சேர்க்கையான வாழ்க்கை முறை மாறிவிட்டால், கட்டமைப்பு மாறிவிடலாம். நாம் இன்னும் நசுக்கப் பெறலாம், ஏமாற்றப் பெறலாம். கடந்த வரலாற்றைப் பார்த்தால், நம்முன்னோர்கள் மன்னர்கள் தொந்தரவு காரணமாகக் குடி பெயர்ந்து இருக்கிறார்கள். நாக நாட்டில் இருந்து தொண்டை நாடு வந்து இரத்தின தன வைசியர் என்ற பெயருடன் தொண்டை நாட்டிலிருந்து சோழநாடு வந்து இரத்தின தனமகுட வைசியர் இரத்தின தன மகுட பூபால வைசியர் என்ற பெயர்கள் பெற்று பாண்டி நாடு வந்து, ஏழு வழி நகரத்தார் என்றும் நாட்டுக்கோட்டை நகரத்தார் என்றும் 9 கோவில் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்றும் 96 ஊர்களை அமைத்துக் கொண்டதால் 96 ஊர் நாட்டுக் கோட்டை நகரத்தார் என்றும் போற்றுதற்குரிய சமூகமாகத் திகழ்ந்து வரும் நாம் நமது அரசுகள் உதவி செய்யாததால் வேறு எந்த அரசை நாடிச் செல்லமுடியும். அதற்கு வாய்ப்பு இருப்பதாகத் தெரியவில்லை. குழந்தைகளின் எண்ணிக்கை குறைந்து வருவதால் உறவுகள் இன்றியும் பொருளீட்டல் காரணமாக நம் சிறப்புடைய ஊர்களை விட்டும் வீட்டுக்குள் ஒற்றுமையின்மை காரணமாகவும் பொருளாதாரச் சூழ்நிலை காரணமாகவும் நம் வீடுகளை விட்டும் மெல்ல மெல்லப் பிரிந்து, தனிச் சென்று கொண்டிருக்கிறோம். ஆனால் நாம் எங்கே செல்கிறோம்?, இனி நமக்கு என்ன பெயர்? தெரிய வில்லை காலம் தான் பதில் சொல்ல வேண்டும். மாற்றம் தவிர்க்க முடியாதது. ஆனால் அது நம் சமூகத்தை இன்னும் சிறப்படையச் செய்வதாகவும் மதமாற்றம் ஏற்படாத மென்மைத்தன்மை மாறாத நிலையைக் காப்பதாகவும், மண முறிவுகளைத் தடுப்பதாகவும், பெற்ற பிள்ளைகளைப் போல பெற்றவர்களையும் பேணிக் காப்பதாகவும், அவர்களும் அனுசரித்துப் போவதாகவும் நமக்குள் இன்னும் அதிகமான பிணைப்பை ஏற்படுத்துவதாகவும் இருக்க வேண்டும். குறைந்த பட்சம் இருக்கிற இணைகளை இன்னும் குறைக்காமலாவது இருக்க வேண்டும்.

## 9. மன்னரை முந்தியோர்

பிரம்மாவின் முகத்திலிருந்து தோன்றியவர் அந்தணர், தோளிலிருந்து தோன்றியவர் சத்திரியர் தொடையிலிருந்து தோன்றியவர் வைசியர் என்பன போன்று ஒவ்வொரு குலத்தாரும் தோன்றியதை சாத்திரங்கள் கூறுகின்றன. இதைப் பார்க்கிற பொழுதும் மன்னர்களுக்குப் பிறகு அவர்கள் செய்த தருமங்களை நாம் தொடர்ந்ததாலும் மன்னர் பின்னோர் என்று அழைக்கப்பெறுகிறோம். இவை மட்டுமல்லாமல்,

பட்டினத்தார் மன்னர்கட்கு ஈடாக வாழ்ந்தது வர்ணிக்கப் பெறுவதிலிருந்தும் மனுநீதிச் சோழன் காலத்தில் சோழ மன்னர்களுக்கு நாம் முடி சூட்டும் பேரு பெற்று மகுட தன வைசியர்களாகி, புலிக்கொடிக்கு இணையான சிங்கக் கொடி கொடுக்கப் பெற்று மாளிகைகளில் தங்கக் கலசம் வைத்துக் கொள்ள அனுமதி வழங்கப் பெற்றதிலிருந்தும்,

பாண்டி மாதேவியுடைய சிலம்பு போன்ற சிலம்பைக் கண்ணகி அணிந்ததிலிருந்தும் பழைய காலத்தில் இருந்த நம் பெரிய அளவு கழுத்துரு மற்றும் வைர ஆபரணங்களைப் பார்க்கிற பொழுதும் பெரிய வெள்ளிக்கடகாம், கடாரம் போன்ற பெரிய பொருள்களைப் பார்க்கிற பொழுதும்,

நாட்டுக் கோட்டை, நாட்டரசன் கோட்டை தேவகோட்டை அலவாக்கோட்டை, கோட்டையூர் அரண்மனை சிறுவயல், வெற்றியூர் வேந்தன்பட்டி, சோழபுரம் இது போன்ற நம் ஊர்ப் பெயர்களைப் பார்க்கிற பொழுதும்,

திருமணத்தின் பொழுது மாப்பிள்ளை டர்பன், பதைக்கம், சால்வை அணிவிக்கப்பெற்று குதிரை ஏறி வருவதிலிருந்தும் மகர் நோன்பின் பொழுது கிளுக்கி குத்துவதிலிருந்தும் 63 நாயன்மார்களில் ஒருவரான இயற்பகையார் வரலாற்றைப் படிக்கிற பொழுது நம்மவர்கள் போர்த் திறம் பெற்றிருந்ததை அறிகிற

பொழுதும் முன்னர் சொல்லியது போல மன்னர்கள் வழங்கிய ஆலயங்களையும் சத்திரங்களையும் மடங்களையும் வேத பாடசாலைகளையும் பரிபாலனம் செய்து வருவதிலிருந்தும்,

பஞ்ச காலங்களில் கூட திருமணத்தின் பொழுது 7 நாள்களிலும் இன்னும் பிற நிகழ்ச்சிகளிலும் தஞ்சாவூர்த் தாட்டிலையில் வகை குறையாத உணவு பரிமாறி யதிலிருந்தும் முதலாம் சந்திரகுப்தர் இரண்டாம் சந்திரகுப்தர் என்பது போன்று முழுவிலாசம் இட்டு எழுதி வருவதிலிருந்தும்,

முன்னர்க் காலங்களில் மாத்து விரிக்கப்பெற்று, பொற்காசுகளும் பின்னர் காசுகளும் தூவப் பெற்று இறுதி யாத்திரை நடத்தியதிலிருந்தும்

நல்லன அல்லன இரண்டிற்கும் அனைத்துத் தொழில் செய்வோரும் வருவதிலிருந்தும் கோவில் நிகழ்ச்சிகளில் செய்யப் பெறும் எல்லா மரியாதைகளிலிருந்தும் நாம் மன்னர் பின்னோர் என்று பெருமையுடன் அழைக்கப்பெறுகிறோம் .
இருப்பினும் நவரத்தினம் போன்ற ஒன்பது நகரக் கோவில்களையும் இன்னும் பலவற்றையும் வழங்கிய போற்றுதற்குரிய மாமன்னர்கள் இன்று இருந்திருந்தால் அவர்களே நம்மைப் பார்த்து வியந்து, 'நாங்கள் வாளால் கண்டதை விட நீங்கள் வேலால் கொண்டது அதிகம். நாங்கள் திறை பெற்றும் ஒருவரை ஒருவர் வெற்றி பெற்றும் சேர்த்த செந்நீர் தோய்ந்த பொருள் பெரிதானாலும் நீங்கள் எல்லீரும் திரை கடல் ஓடிச் சேர்த்த ஒவ்வொருவரின் வெந்நீர் தோய்ந்த பொருளுக்கும் ஈடாகாது.

மலேயா போன்ற நாடுகளில் தங்களுடைய வட்டிக் கடைகளில் எங்களில் ஒரு சிலரின் மணிமகுடங்களை ஈடு பொருளாகப் பெற்றுக் கொண்டு கடன் வழங்கி அவர்களின் புகழ் காத்தீர்கள். நாங்களோ இறைவியையும் இறை வனையும் அம்மையே! அப்பனே! என்று அழைத்துப் பெருங்கோவில்கள் எழுப்பியிருந்தாலும் அந்த இறைவனே

தங்களை அம்மையே! அப்பனே! என்று அழைத்தான். அந்த அம்மைக்கும் அப்பனுக்கும் தாங்கள் வழங்கிய வைராபரணங்களும் சொர்ண அங்கிகளும் தங்க வாகனங்களும் பஞ்சலோகச் சிலைகளும் தாம் எத்தனை! எத்தனை!

எங்களுக்கோ நாட்டுக்கு ஒரு அரண்மனை ஆனால் தங்களுக்கோ வீதிக்குப் பல அரண்மனை என்னே தங்கள் சிறப்பு! நாங்களோ எங்கள் ஏகாதிபத்திய அரசவையின் நீதிபதிகள் தாங்களோ ஏகமனதான மக்களவை நீதிமன்றத்தின் நீதிபதிகள்.

எங்களுக்கு அவசியம் இருக்க வேண்டிய தர்ம சிந்தனையும் விவேகமும் தங்கள் எல்லோருக்கும் பரம்பரை பரம்பரையாக இருந்து வருவதை வியந்து பாராட்ட எங்களுக்குச் சொற்களே கிடைக்கவில்லை.

எங்களுடைய வாழ்க்கை அகராதியில் நாட்டுக்கோட்டை நகரத்தார் என்ற சொல்லுக்கு நாநயம் என்றும் ஒருபோதும் அரசாணை மீறாதவர்கள் என்றும் அல்லவா பொருள் இருக்கிறது. என்னே தங்கள் பெருமை!

நீங்களும் ஆலயங்கள், ஊருணிகள் சத்திரங்கள், வேத பாடசாலைகள், தனி ஆதீனம், மடங்கள், பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள், தொழிற்கூடங்கள், வங்கிகள் இன்னும் எத்தனையையோ ஏராளமாகச் செய்து இருக்கிறீர்கள்.

அதுமட்டுமா நாங்கள் எவரும் செய்திராத திருப்பணியான தமிழ்த்தாய் கோவிலைக் காரை நன்னகரில் கட்டி இருக்கிறீர்கள் ஆகா! தங்களை என்ன வென்று புகழ்வது தங்களைப் போலச் சிறந்த தனி மனிதர்கள் உலகில் பலர் இருக்கலாம். ஆனால் கட்டுக்கோப்பான குடும்ப அமைப்புள்ள தங்கள் சமூகத்தைப் போலச் சிறந்த சமூகத்தை

உலகில் வேறு எங்கும் காணமுடியாது. இத்தகைய சிறப்பு வாய்ந்த தங்களைப் பெற்றமை தமிழ் மண்ணுக்கு பாரதத் திருநாட்டுக்கு ஏன் இக்கண்டத்திற்கே பெருமை தான்!

எங்கள் மரபில் வந்த இளங்கோவும் தங்களை மன்னர் பின்னோர் என்று வர்ணித்துத் தங்கள் பெருஞ்சிறப்பைக் காப்பியமாக வடித்திருக்கிறார். மேற்சொன்ன சிறப்புகளை எல்லாம் பார்த்திருந்தால் அவரும் எங்களோடு சேர்ந்து 'நாங்களோ சட்டம் ஒழுங்கைக் கைக்கொண்டு மகுடஞ்சூட்டிய நாடாளும் மன்னர்கள் தாங்களோ சட்டம் ஒழுங்குக்குக் கட்டுப்பட்டு மகுடஞ்சூட்டாத பார் ஆளும் மன்னர்கள். சந்தனம் அளவில் சிறிதானாலும் மணத்தில் மாறுவதில்லை அதுபோல தாங்கள் பொருளாதாரத்தில் பின்னடைந்து விட்டாலும் சைவம், தமிழ் தானம், தர்மம், மதிநுட்பம், நாகரிகம், கட்டுப்பாடு, கலாச்சாரம், பண்பாடு, பழக்க வழக்கம் மற்றும் பரிபாலனம் இவைகளில் எங்கள் பின்னோர் இல்லை எங்களை முந்தியோர்' எனப் பாராட்டி இருப்பார்' என்று கூறுவார்கள்.

இது கற்பனைதான் என்றாலும் இதில் யதார்த்தம் இருக்கிறது. அவர்கள் தாமே நம்மை மகுடஞ் சூட்டச் சொன்னார்கள் அவர்கள் தாமே நம் கண்ணகிக்குக் காப்பியம் இயற்றினார்கள். கோவிலும் கட்டினார்கள். அப்படியிருக்கும் பொழுது நாம் **மன்னரை முந்தியோர்** என்று நெஞ்சு நிமிர்த்திச் சொல்வோம்.

## 10. இசைகுடிமானம்

*மானமிகு தர்மத்தின் வழிநின்று வாய்மையினில்*
*ஊனமில் சீர்ப்பெரு வணிகர் குடிதுவன்றி ஓங்குபதி*

என்றும் பல இடங்களில் நாயன்மார் தோன்றக் கூடிய அளவு நல்ல சூழல் கொண்ட சிறந்த குலம் என்றும் சேக்கிழார் பெருமானால் பெரிய புராணத்தில். வர்ணிக்கப்பெறுகிற மகோன்னதமான நம் குடிப் பெருமையை இசைப்பது அதாவது சொல்வது தான் இசை குடிமானம் இது நம்முடைய செவ்விய வாழ்க்கை முறையையும் அதில் ஓர் அங்கமான திருமண நிகழ்ச்சியையும் பார் அறியப் படம் பிடித்துக் காட்டுகிறது.

இந்த இசைகுடிமானமும் பணத்திருப்பேடு என்ற மொய்ப்பண ஏடும் நம் சிறப்புகளை எடுத்தியம்பும் இரட்டை ஏடுகளாகும்.

மாப்பிள்ளை வீட்டாராக இருந்தால் (உதாரணத்திற்கு) கேரளசிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டிய புரத்தில் உறையூருடையான் அழகப்ப செட்டி அண்ணாமலையரோ கல்வாச நாட்டில் இளையாற்றங் குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராஜநாராயண புரத்தில் பிள்ளையார் பட்டியான திருவேட் பூருடையான் குமரப்ப செட்டி வள்ளியப்பரோ அவர் மகன் சிதம்பரத்திற்கு இவர் மகள் சிவகாமியைப் பாணிக் கிரஹணம் பண்ணிக் கொண்டமைக்கு என்றும்

பெண் வீட்டாராக இருந்தால், கல்வாச நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராஜநாராயணபுரத்தில் பிள்ளையார் பட்டியான திருவேட்பூருடையான் குமரப்ப செட்டி வள்ளியப்பரோ கேரளசிங்கவள நாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரத்தில் உறையூருடை யான் அழகப்ப செட்டி அண்ணாமலையரோ இவர் மகன்

சிதம்பரத்திற்கு அவர் மகள் சிவகாமியைப் பாணிக் கிரஹணம் பண்ணிக் கொண்டமைக்கு என்பன போன்று அவரவர் களுடைய கோவில் பிரிவுகளை முதலிலும் எதிர் தரப்பின் கோவில் பிரிவுகளைப் பிறகும், இருவருமே மணமகன் பெயரை முதலிலும் மணமகள் பெயரைப்பிறகும் எழுதி ஆரம்பமாகிறது இசை குடிமானம்.

இதில் உள்ள சிறப்பைப் பாருங்கள் அழகப்ப செட்டி அண்ணாமலையரோ என்று சுருங்கச் சொல்லி, அழகப்ப செட்டியார் மகன் அண்ணாமலை செட்டியார் என்று பொருள் விரிக்கப்பெறுகிறது.

பெண்களின் ஏழு பருவங்களான பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அறிவை, தெளிவை, பேரிளம் பெண் என்ற நிலைகளில் 7 முதல் 14 வயதுக்குள்ளான பெதும்பைப் பருவமான பெண்மை நிலை அடையும் பருவத்தில் தான் முற்காலத்தில் திருமணம் நடந்திருக்கிறது. இதை நம் இசை குடிமானத்தில் பாணிக்கிரஹணம் என்று சொல்லப் பெற்றிருக்கிறது.

பாணிக்கிரஹணம் என்ற சமஸ்கிருதச் சொல்லுக்கு கன்னியாதானம் என்று பொருள் நம்மரபுக்கு ஏற்ப இதைப் பொருளாக்குகிறபொழுது, மாப்பிள்ளை வீட்டாரானாலும் சரி பெண் வீட்டாரானாலும் சரி முதலில் கல்யாணம் சொல்வது பெரியவீடு என்று சொல்லப்பெறும் அப்பத்தாள் வீட்டுக்குத்தான் மொய்ப்பண வரவு வைக்கப் பெறுவதும் அப்பத்தாள் வீட்டு அய்யா பெயருக்குத்தான். அப்படியானால் அவர்களே தான் இசைகுடிமானம் எழுதி எழுதினேன் என்று கையொப்பமிடுபவர்களாகவும் இருந்திருக்க வேண்டும்.

பெரியவர்கள் தான் தலைமை ஏற்க வேண்டும் என்பது நம் மரபு. அவர்கள் தான் ஒக்கூருடையான் அரும்பாக் கூருடையான் என்று சொல்ல முடியும் மாப்பிள்ளை அழைக்கச் செல்லும் பொழுது திருப்பூட்டுத் தட்டு தூக்கி

வருவதும் தேங்காய்ச் சட்டி தூக்கி வருவதும் திருமண அழைப்பின் மூலம் பிறரை அழைப்பவரும் அப்பத்தாள் வீட்டு அய்யா என்பதால் இசைகுடிமானம் எழுதுவது போலவே, நிலம், நீர், காற்று, ஆகாயம் ஆகியவற்றுடன் பிரதிஷ்டை செய்யப் பெறும் அக்னி முதலான பஞ்ச பூதங்கள் சாட்சியாக பெண்ணின் அப்பத்தாள் வீட்டு அய்யா முன்னிலையில் பெண்ணின் தகப்பனார் உடன் இருக்க பெண்ணின் மாமக்காரர் தேங்காய் வெற்றிலை பாக்குகளை இருகரங்களில் ஏந்திய பெண்ணை மணமகனுக்குக் கன்னியாதானம் செய்து கொடுக்கிறார். அதாவது பாணிக்கிரஹணம் பண்ணிக் கொடுக்கிறார். இந்தப் பாணிக்கிரஹணத்தைப் பண்ணிக் கொண்டமைக்கு மணமகனின் அப்பத்தாள் வீட்டு அய்யா பூஷணம் பூட்டுகிறார். அதாவது தாங்கள் செய்து வந்த கழுத்துருவை அணிவிக்கிறார். தானம் பெற்றுக் கொண்டவர், தான் பெற்றுக் கொண்டதற்குப் பதிலுக்குச் செய்யவேண்டும், என்பதற்கிணங்க முற்காலத்தில் பொன் கொடுத்துப் பெண் எடுத்துத் தாங்களே திருமாங்கல்யம் செய்து திருப்பூட்டி இருக்கிறார்கள். இது பிற்காலத்தில் தலைகீழாகத் திரும்பி விட்டது. திருமாங்கல்யம் அணிவிக்கப் பெற்றபிறகு மாப்பிள்ளை தன் மாமக்காரர் துணையொடு தகப்பனார் மற்றும் அய்யாக்கள் உள்ளிட்ட பெரியவர்கள் முன்னிலையில் பெண்ணின் கரங்களைப் பற்றுகிறார், என்று கொள்ளவேண்டும். இதை மாப்பிள்ளை கையும் பெண்ணின் கையும் பட்டால் கட்டப்பெற்று இரண்டு மாமாக்காரர் களுடன் இருவரும் அக்னியையும் மணவறையையும் சுற்றி வருவதிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

காலப்போக்கில், மாப்பிள்ளையின் அப்பத்தாள் வீட்டு அய்யாவின் வயது முதிர்ச்சி வேலைப்பளு காரணமாகவும் அவர்கள் இல்லாததாலும் இசைகுடிமானம் எழுதுவது பங்காளிகளிடமும் திருப்பூட்டுவது பங்காளிகளில் நன்கு வாழ்ந்த பெரியவரிடமும் பிறகு ஊர்ப் பெரியவரிடமும் சென்று பல ஆண்டுகளாக அவரவர்

வழக்கப்படி பெரியவர்கள் எடுத்துக் கொடுக்க மாப்பிள்ளை திருப்பூட்டு கிறார். பங்காளிகள் இசைகுடிமானம் எழுதுவதால்தான், உறையூருடையான் என்பன போன்றவற்றில் ஆர் என்ற மரியாதை விகுதி சேர்க்கப்பெற்று, உறையூருடையார் என்றாயிற்று.

65,70 ஆண்டுகளுக்கு முன்பு வரை நம் இல்லத் திருமண நிகழ்ச்சிகள் 6,7 நாள்களுக்கு நடந்ததாக நம் பெரியவர்கள் சொல்கிறார்கள் அமாவாசை பௌர்ணமியை மையமாகக் கொண்டு, 27, நட்சத்திரங்களுக்கு ஏற்றாற்போல நடைபெறும் திருமணம் 7 நாள்களுக்கு நடப்பதற்கு முன்பு ஏன் இன்னும் அதிகமான நாள்களுக்கு நடந்திருக்கக்கூடாது என்று நினைக்கத் தோன்றுகிறது. இவ்வாறு இருக்க வாய்ப்பில்லை தான். இருந்தாலும் அரைக்கல்யாணம் என்ற திருவாதிரைப் புதுமை, கார்த்திகைப் புதுமை என்ற நிகழ்ச்சிகள் அந்தந்த நட்சத்திரங்களில் நடந்திருக்கின்றன. அதுபடி பார்த்தால் காப்புக்கட்டுப் புதுமையின் பொழுது சிவபெருமானின் பாதுகாப்பில் விடப்பெற்ற பெண்ணைத் திருமணத்தன்று மணமகனின் பாதுகாப்பில் சேர்ப்பதற்காக அழைத்து வருவதாகப் பாவனை செய்கிற பூரங்கழித்தல் என்ற நிகழ்ச்சியும் பூர நட்சத்திரத்தன்று தான் நடைபெற்றிருக்க வேண்டும். அப்படி ஒவ்வொரு நிகழ்ச்சியும் நடந்திருந்தால் பாருங்கள் திருமண நிகழ்ச்சி எத்தனை நாள் நடந்திருக்கும்! திருமணமும் பௌர்ணமியை எதிர் நோக்கியே நடந்து சடங்குகள் நிறைவு பெற்று நாள் நட்சத்திரம் பாராமலேயே முழு நிலா நாளில் மணமக்கள் இல்லறம் புகுந்து தனிமை காண ஏதுவாகி விடுகிறது. இதனால் தானோ என்னவோ இன்றும் நாம் இதற்கு நாள் பார்ப்பதில்லை' என்றே நான் கருதுகிறேன். இம்முழு நிலவின் சிறப்பும் சிலப்பதிகாரத்தில் வர்ணிக்கப்பெறுகிறது.

இவ்வாறாகக் காப்பியம் கூறும் நம் திருமணத்தை நம் கண்முன் கொண்டு, வரும் இசைகுடி மானத்தையும் ஒரு முறைச் சிட்டை என்றே சொல்லாம்.

முக்காலத்திற்கும் ஏற்றவாறு வரும் பொருள் மறைந்து வருவதை இலக்கணத்தில் வினைத் தொகை என்பர் அதுபோல இசைகுடிமானம் என்ற சொல் அமைந்து நம் குடிப்பெருமையைச் சொல்லியது, சொல்கிறது, சொல்லும். சீதன சீர்வரிசைகளில் செய்ததையும் செய்கிறதையும் செய்ய வேண்டியதையும் சொல்லும்.

இசைகுடி மானத்தில் உள்ள வாசகங்களைப் பார்க்கிற பொழுது அன்று, 'நம்மவர் சீர்வரிசை எல்லோரி டமும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும்' என்று அனைத்து ஊர் நாட்டுக் கோட்டை நகரத்தார் கட்டு ஏற்பாடாகி எல்லோரும் பின்பற்றி வந்து காலங்கள் செல்லச் செல்ல கொடுக்கல் வாங்கல் ஆளுக்குத் தகுந்தாற் போல மாறி கட்டினை மீறி நடக்காதது போல எல்லோரும் நடந்து கொண்டு, பிறகு அப்படி எழுதிக் கொள்வது ஒரு மரபாகி இருக்கலாம்.

இதில் கண்டவண்ணம் செய்வதாக இவர் ஒப்பு தலுடன் அவரும் அவர் ஒப்புதலுடன் இவரும் இணங்கி வரும் பொழுது இந்த இசைகுடிமானம் இசைவுப் பிடிமானம் ஆகிறது.

திருப்பூட்டிய பிறகு மணமக்களின் பெற்றோர் இருவரும் சாமி வீட்டில் அமர்ந்து, சங்கு ஊதி கையொப்ப மிட்டு, மஞ்சளை ஏற்றித் தடவி எல்லோரும் கேட்கும்படி வாசித்து உடன்படிக்கையான இந்த இசைகுடிமானத்தை மாப்பிள்ளை வீட்டார் பெண் வீட்டிற்குக் கொடுத்து பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டிற்குக் கொடுத்து பரிமாறிக் கொள்கின்றோம்.

இதுகாறும் சிறப்புற்று விளங்கும் இசைகுடிமானம் காலத்திற்கு ஏற்ற மாற்றங்களையும் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. வெள்ளாட்டிக்கு (நகரத்தார் பெண்களுக்கு வேலை செய்யும் பெண் வேலையாள் ) பணம் முப்பது என்ற வாசகம் நாம் சோழ வளநாட்டில் இருந்ததைத் தெரிவிக்கிறது. ஒன்பது கோவில்களும் உட்பிரிவுகளும் நாம் பாண்டி நாடு வந்து படிப்படியாக ஏற்பட்ட மாற்றங்களைத் தெரிவிக்கின்றன.

ஆனால் நாம் வாழ்ந்து வருகிற நம் பெருமை மிகு 96 ஊர்களின் (இருக்கின்ற ஊர்களின் ) பெயர்கள் முழுமையாக இடம் பெறவில்லை. இது ஒரு சிறு குறையே!

இசை குடிமானம் எழுதும் வழக்கம் ஏற்பட்ட காலத்தில் 9 கோவிலாரும் 9 கோவில் ஊர்களிலேயே வாழ்ந்திருக்கின்றனர். அப்படி இருந்திருந்ததால் தான் கோவில் பிரிவு மற்றும் பெயர்கள் மட்டும் எழுதி இருக்கிறார்கள். அவர்களை இனங்கண்டறிவது சிரமம் இல்லை. ஆனால் இன்று நகரத்தார் ஊர்கள் எல்லாவற்றிலும் எல்லாக் கோவிலாரும் பிரிவினரும் கலந்து வாழ்ந்து வருகிறோம் இப்படி இருக்க கேரள சிங்க வளநாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டிய புரத்தில் உறையூருடையான் குப்பாஞ்செட்டி கண்ணப்பரோ என்று இருந்தால் எவ்வளவோ கால மாற்றங்களுக்குப் பிறகு வரும் நம் வருங்காலச் சந்ததியினர் ஏன் நாமே கூட இவர் எந்த ஊர்க்காரார் என்பதை எப்படி அறிய முடியும். அதை விட எவ்வளவோ சட்ட ரீதியான தேவைகளுக்கு ஊர்ப் பெயர் வேண்டுமே!

காப்புக்கட்டுப் புதுமை செய்யாவிட்டாலும் பூரம் கழிக்கிறோம். வெள்ளாட்டிகள் வழக்கம் இல்லாவிட்டாலும் எழுதுகிறோம் இதுபோல எத்தனையோ செய்கிறோம். ஆங்கிலத் தேதியைக் கூட இசை குடிமானத்தில் சேர்த்துக் கொண்டு விட்டோம். அப்படி இருக்கும் பொழுது நகரக் கோவிலில் பாக்கு வைத்து ஊரைப் பதிவு செய்வது போல நம் தொல் புகழ் இசைகுடிமானத்திலும் நாம் எல்லோரும் நம் ஊர்ப் பெயர்களையும் சேர்த்துக் கொண்டால் அதற்கு மகுடஞ்சூட்டுவது போன்றதாகும்.

## 11. பணத்திருப்பேடு

பணம்+திரு+ஏடு என்பதே பணத்திருப்பேடு. பணம் என்பது இன்றைய ரூபாய் பைசா முறைக்கு முன் காலத்து நாணயக் குறியீடுகளுள் ஒன்று. ஒரு பணம் என்பது 2 அணாவைக் கொண்டது (ஒரு அணாவுக்கு 6 பைசா) அதாவது 12 பைசாவைக் கொண்டது. திரு என்பது அடைமொழி. ஏடு என்பது ஓலைச் சுவடி.

புதுமை, சுவீகாரப்புதுமை திருமணம், மணிவிழா சதாபிசேகம் புதுமனை புகுவிழா போன்ற நல்ல நிகழ்ச்சிகளில் பணத்திருப்பேடு எழுதப்பெற்று வருகிறது. நம் பங்காளிகள் உறவினர்கள் எண்ணிக்கையில் பெருக வேண்டும் என்ற எண்ணத்தை நம் மனதில் பதிய வைக்க ஏற்கனவே சொன்னவைகளான கோலத்தின் இரட்டை வரிசைப்புள்ளி, இரட்டைப் படை எண்ணிக்கையில் வளவு வீடுகள் போன்றே பணமும் 2ன் மடங்குகளில் எழுதப்பெறுகின்றன.

இசைகுடிமானம் போலவே அன்று ஓலைச்சுவடிகளில் எழுத்தாணி கொண்டு எழுதப் பெற்ற பணத்திருப்பேடு இன்று புத்தக வடிவில் மொய்ப்பண ஏடு என்று காட்சி அளிக்கிறது.

'வரிநெடும் புத்தகம்' என்று பட்டினத்தாரால் வர்ணிக்கப் பெறும் பணத்திருப்பேட்டில் முன்காலங்களில், நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டவர்களுக்கு மட்டுமே, பணவரவு வைக்கப்பெற்று கலந்து கொள்ள இயலாதவர்களுக்கும் கூட்டு இல்லாதவர்களுக்கும் அவர்கள் பெயரில் நிரப்பாமல் விடுவர். இதிலிருந்து அந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்டவர்களை அறிவதற்கு பணத்திருப்பேடு ஒரு வருகைப் பதிவேடு போல இருந்தது. ஆனால் இன்று விடுபெற்றுப் போய்விடக்கூடாது என்று சொல்லி, கலந்து கொள்ள இயலாதவர்களுக்கும் வரவு வைப்பது வழக்கமாகி இருக்கிறது.

பூஜ்ஜியத்தைக் கொண்டு ஆரம்பமாகும் எண் வரிசையைக் கணிதம் முழு எண் என்கிறது. ஆனால் ஒன்றை வளர்ச்சி என்று நம் கொடுக்கல் வாங்கல் முறைகளும் 2ஐப் பெருக்கம் என்று பணம் எழுதுதல் போன்றவைகளும் சொல்லாமற் சொல்லுகின்றன.

வளர்ச்சியும் பெருக்கமும் ஒன்றினாலும் முக்கியத்துவம் குறைந்தவைகள் 11/- 101/- 1001/- என்று உள்ளன. முன் சொல்லியவை போன்ற முக்கியத் தேவையானவைகள் 2ன் மடங்குகளாக உள்ளன. பாங்காளி களுக்குள் எழுதும் பணம் ஒரே மாதிரியாக இரண்டின் மடங்கான 8 ஆகவும் 2 ஆகவும் நிகழ்ச்சி, நிகழ்ச்சி நடைபெறும் நாள் பங்காளிகள் கட்டு போன்றவற்றிற்கு ஏற்ப மாறி மாறி வந்திருக்கிறது. ஆனால் உறவினர்களுக்குள் எழுதிக் கொள்ளப் பெறும் பணம் 16 ஆகவே இருந்து வருகிறது. அணாமுறை மாறியபிறகு 16 பணம் 2 ரூபாயாகவும் 8 பணம் 1 ரூபாயாகவும் 2 பணம் 0.25 ஆகவும் ஆகி இருக்கிறது. மாமக்காரர்கள் வரவு மட்டும் 301 பண மாகவோ 501 பணமாகவோ 1001 பணமாகவோ இருக்கிறது. நம் குடும்பங்களை வளரச் செய்ய முதலில் ஸ்ரீதனம் என்ற பொருள் தருவதால் அவர்கள் தரும் பணம் எப்பொழுதும் வளர்ச்சியைக் குறிக்கும் ஒன்றாகவே இருக்கும்.

பங்காளிகள் பகுதி முதலில் எழுதப் பெறுகிறது. அப்படி எழுத ஆரம்பிக்கும் பொழுது சங்கு ஊதி (இருதரப்பிலுமே) முதலில் அப்பத்தாள் வீட்டு அய்யா, பெரியப்பார், சித்தப்பார், அண்ணன், பெரியய்யா வீடு சின்னய்யா வீடு பெயர்களில் ரூ.2/- வரவு வைக்கப்பெற்று, பிறகு வாரிசுப்படி பங்காளிகள் பெயருக்கு அவரவர் வழக்கப்படி ரூபாய் ஒன்றோ காலோ வரவு வைக்கப்பெறுகிறது. தாயபிள்ளைகள் பகுதி எழுதும் பொழுது சங்கு ஊதி முதலில் ஆயாள் வீட்டுக்கு (முன் சொல்லியது போல) அவரவர் வழக்கப்படி வரவு வைத்து, பிறகு அம்மான்கள் அவர்தம் பிள்ளைகள் இதர உறவினர்கள் பெயரில் வரவு வைக்கப் பெறுவது எல்லாம் நாம் அறிந்ததே!

உறவினர்களும் பங்காளிகளும் எப்பொழுதும் பெருகிக் கொண்டே இருகக வேண்டும் என்பதால் தான் நம் பணத்திருப்பேடுகள் என்றும் இருப்புக் கட்டப்பெறாமல் திறந்தே இருக்கின்றன.

வாழிய நகரத்தார் வாழிய ஒன்பதுகோவில்
வாழிய வாழிய திருமகள் சேர்க்கையொடு!

MANNARAI MUNTHIYOR.

